## ஹை பவர் ஸர்ஃப் சலவை: ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவை—
## அது வெட்டவெளிச்சம்.

உங்கள் மகன் துணிகளை அழுக்காக்கிக் கொள்வதில் பலே சூரனோ? அப்படியானால் உங்களுக்குத் தேவை : அழுக்கை அகற்றிட ஒரு பலே சூரன்; ஹை பவர் ஸர்ஃப்—வல்லவனுக்கு வல்லவன்.

அதிக வலுவுடைய பொருள்கள் அடங்கியது ஹை பவர் ஸர்ஃப், அதிக சலவை சக்தி: தூசி, அழுக்கு எதனையும் சுவடு தெரியாமல் அகற்றிடும். படு அழுக்கான துணிகளையும் கூட பளிச்சிட வைக்கும்.
வர்ணத் துணிகளுக்கும் உகந்தது ஸர்ஃப்—தூய்மை ஒளி மிளிர வைக்கிறது.

ஹை பவர் ஸர்ஃப்—குடும்பத்தில் உள்ள அனைவரின் துணிகளுக்கும் அதிக வெண்மை அதிக ஒளி, கேட்பானேன், வேறெந்த சலவைப் பவுடரையும் விட ஸர்ஃப் உபயோகிக்கும் தாய்மார்களே அதிகம்.






**வேறெந்த சலவைப் பவுடரையும் விட ஸர்ஃப் உபயோகிக்கும் தாய்மார்களே அதிகம்.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-SU-220-2012 TM



# கதை கதையாம் காரணமாம்!

## ஜெயலலிதா

எனக்கு வயது பன்னிரண்டு இருக்கும். என் தாயார் எங்களை யெல்லாம் மாமல்ல புரத்துக்கு 'பிக்-நிக்' அழைத்துக்கொண்டு போனார். என்னுடன் என் பள்ளித் தோழி நளினியும் வந்திருந்தாள்.

மாமல்லபுரத்தில் இப்போது இருப்பது போல் அப்பொழுது பலவிதமான ஓட்டல்கள் கிடையாது. ஒரே பெரிய கெஸ்ட் ஹவுஸ் தான் இருந்தது. கீழ்ப் பகுதியை என் தாயார் 'புக்' செய்திருந்தார். மாடியில் வேறு யாரோ நிறையப் பேர் வந்திருப்பதாகச் சொன்னார்கள்.

மதிய உணவுக்குப் பின் நளினியும் நானும் கெஸ்ட் ஹவுஸ் முன்னாலேயே இருந்த கடற் கரைக்குச் சென்றோம். அங்கே மணலில் உருண்டு, புரண்டு, கிளிஞ்சல்களைப் பொறுக்கி எடுத்து, உரக்கக் கத்தி, சிரித்து, ஆட்டி அடித்துக் கொண்டிருந்தோம்.

''ஏய் பாப்பா!'' திடீரென்று ஒரு கனத்த ஆண் குரல் கூப்பிடுவது கேட்டது. திரும்பிப் பார்த்தேன். கெஸ்ட் ஹவுஸ் மாடி பால் கனியில் சிவாஜி கணேசன் நின்று கொண் டிருந்தார். அவர்தான் என்னைக் கூப்பிட் டிருந்தார்.

சில மாதங்கள் முன்பாகத்தான் எனது பரத நாட்டிய அரங்கேற்றத்துக்குத் தலைமை வகித்திருந்தார். எனவே என்னை உடனே அடையாளம் கண்டு கொண்டார்.

''நீயும் உன் ஃபிரெண்டும் இங்கே வரீங் களா?'' என்று அழைத்தார் சிவாஜி.

''ஓ! வரோம்'' என்று நானும் என் தோழி யும் மேலே மாடிக்குச் சென்றோம்.

நன்றாக நினைவிருக்கிறது. அங்கே சிவாஜி யைத் தவிர மறைந்த டைரக்டர் பீம் சிங், இன்னும் ஏராளமானவர்கள் இருந்தார்கள். எல்லாரும் கதை டிஸ்கஷனுக்காக வந் திருந்தார்கள்.

சில நிமிஷங்கள் என் படிப்பைப் பற்றியும் நாட்டியப் பயிற்சியைப் பற்றியும் என் தாயார் நலமா என்றும் சிவாஜி என்னிடம் விசாரித்தார். பிறகு மற்றவர்களுடன் கதை டிஸ்கஷனில் மும்முரமாக இறங்கி விட்டார். அவர்கள் பேசுவதை ஆவலோடு கேட்டுக் கொண்டிருந்தோம். அவர்கள் விவாதித்துக் கொண்டிருந்த கதையில் வரும் ஒரு பெண்ணின் பெயரும் நளினி.

சுமார் ஓராண்டு கழித்து, ''பாலும் பழ மும்'' படம் வெளிவந்ததும், அதைப் பார்க்க சாந்தி தியேட்டருக்குப் போயிருந் தேன். அப்பொழுதுதான் சட்டென்று புரிந்தது — அன்றைக்கு மாமல்லபுரத்தில் நான் உட்கார்ந்து கேட்ட கதை டிஸ்கஷன், இந்தப் படத்தின் கதைதான் என்று!

அதுவரையில் சினிமாப் படம் என்றால் ஏதோ வேடிக்கையான பொழுதுபோக்கு என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தேன். படப்பிடிப்பு எப்படி நடக்கும் என்பது ஏற் கனவே எனக்குத் தெரியும். என் தாயார் நடிகை ஆனதால் பல சந்தர்ப்பங்களில் பார்த்திருந்தேன். ஆனால், ஒரு படத்தின் படப்பிடிப்புத் தொடங்குவதற்கு முன் எவ்வளவு வேலை செய்ய வேண்டியது இருக் கிறது என்பது அன்றுதான் ஓரளவுக்கு எனக்குப் புரிந்தது.






தமிழ் திரைப்பட உலகில் வரவேற்கப்பட வேண்டிய ஒரு புதிய பாதை வகுக்கப்பட்டுள்ளது.

எட்டு பாட்டு, நாலு டான்ஸ், கதைக்குத் தொடர்பில்லாத 'காமிக்' காட்சிகள், கனவு காட்சிகள், டிஷ்யூம் சண்டை என்று மசாலா ஃபார்முலாவைப் பின்பற்றி வந்த திரை உலகு, மண் வாசனையுள்ள யதார்த்தமான கதை, இயல்பான வசனம், அளவான நடிப்பு, எழிலார்ந்த படப்பிடிப்பு என்று திசை மாறியுள்ளது. இந்த ஆரோக்கியமான திருப்பத்துக்கு ஜெயகாந்தன், சிங்கீதம் சீனிவாசராவ் (திக்கற்ற பார்வதி) போன்றவர்கள் விதை ஊன்றியிருந்தாலும் மக்கள் நிமிர்ந்து உட்கார்ந்து இந்தப் புதிய அலையை ரசிக்க ஆரம்பித்தது பாரதிராஜாவின் திரை உலகப் பிரவேசத்தை யொட்டி எனலாம்.

பாரதிராஜாவையும் அவருக்குப் பின்னால் trend setters என்று கூறத்தக்க அளவில் வெற்றி பெற்றுள்ள திரைக்கதை வசனகர்த்தாக்களையும் இவ்விதழ் மேலட்டையில் காண்கிறீர்கள்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

படம் பிடிப்பது என்பது படத் தயாரிப்பின் ஓர் அம்சமே. வீடு கட்ட ஆரம்பிக்கும் முன், சரியான இடத்தைத் தேர்ந்தெடுத்து வாங்க வேண்டும்; வீட்டுக்குப் பிளான் போட வேண்டும். பலமான அஸ்திவாரம் போட வேண்டும். திரைப் படத்தின் அஸ்திவாரமே கதைதான் — பிறகு திரைக் கதை, வசனம், இவையே படத்தின் வெற்றிக்கு அடிப்படைக் காரணங்கள்.

திறமைசாலிகளான இயக்குனர்கள் பெரிய கதை ஒன்றும் இல்லாவிட்டாலும், அவர்களுடைய தனிப்பட்ட ட்ரீட்மெண்ட் மூலம் படத்தைச் சிறப்பாக, ரசிக்கும்படியாக அமைத்து விடுவார்கள். ஆனால், எங்கோ நூற்றில் ஒரு படம்தான் அப்படி அமையும்.

நல்ல சிறந்த கதை கிடைத்தும், குரங்கு கையில் பூமாலை கிடைத்த கதையாக அதை உருத் தெரியாமல் குட்டிச்சுவர் ஆக்கிய இயக்குனர்களையும் பார்த்திருக்கிறேன்.

ஒரு தயாரிப்பாளர் தம் படத்தில் நடிக்கும்படி சில ஆண்டுகளுக்கு முன் என்னைக் கேட்டார். ஒரு பிரபல டைரக்டர் பெயரைச் சொல்லி அவர்தான் டைரக்ட் செய்யப் போவதாக என்னிடம் கூறினார். அதனால் ஒப்புக் கொண்டேன். சில நாட்கள் கழித்துத் தயாரிப்பாளருக்கும் டைரக்டருக்கும் இடையே ஏதோ தகராறு ஏற்பட, அந்த டைரக்டர் அந்தப் படத்திலிருந்து விலகிக் கொண்டார்.

தயாரிப்பாளர் என்னிடம் என்ன செய்யலாம் என்று கேட்டார். படத்தின் கதை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. எப்படியும் அதில் நடிக்க விரும்பினேன். வேறொரு நல்ல டைரக்டரை ஒப்பந்தம் செய்வது தானே என்றேன். சில நாட்களுக்குப் பிறகு தயாரிப்பாளர் என்னிடம் மூன்று நான்கு பிரபல டைரக்டர்களுடைய பெயர்களைச் சொல்லி, அவர்கள் எல்லோரையும் கேட்டு விட்டதாகவும், ஏதோ காரணங்களினால் அவர்களில் ஒருவருடனும் சரிப்பட்டு வரவில்லை என்றும் கூறினார். அவர் சொன்னதை நம்பி விட்டேன்.

''இதை நானே டைரக்ட் செய்கிறேனே'' என்றார் தயாரிப்பாளர். இவர் டைரக்ட் செய்தால் எப்படி இருக்கும்? இவருக்கு டைரக்ஷனில் அனுபவம் ஏது, என்று முதலில் தயங்கினேன். ''அனுபவ மிக்க கேமராமேனை ஒப்பந்தம் செய்கிறேன். எல்லாம் சரியா வந்திடும், தயங்காமல் சம்மதியுங்கள்'' என்று வற்புறுத்தினார் தயாரிப்பாளர். நானும், அந்த வேடத்தின் மீதிருந்த ஆசையால் ஒப்புக் கொண்டேன். ''கதை நன்றாக இருக்கிறது. கொஞ்சம் சுமாராக எடுத்தால் கூட கதை படத்தைக் காப்பாற்றி விடும்'' என்ற மன நம்பிக்கையில் ஒப்புதல் தெரிவித்தேன்.

படப்பிடிப்பு ஆரம்பமாயிற்று. ஆரம்பக் காட்சிகள் நன்றாகவே அமைந்தன. கதை, வசனம், டைரக்ஷன்'' என்று தயாரிப்பாளர் தம் பெயரையே விளம்பரங்களில் போட்டுக் கொண்டாலும், உண்மையாகப் படத்தை இயக்கி, ஆலோசனைகள் கூறி, எல்லாவற்றையும் செய்தது ஓர் அனுபவம் வாய்ந்த எடிட்டர்தான். அவர் உண்மையிலேயே திறமைசாலி. ஆனால் வாயில்லாப் பூச்சி. மிக மிக சாது. டைரக்ட் செய்வதும், ஷாட்களைப் பிரிப்பதும், கேமரா கோணங்களைத் தேர்ந்தெடுப்பதும் அவர்தான். தயாரிப்பாளர் வெறுமனே அவர் பக்கத்தில் நின்று கொண்டு எப்போது ''ஸ்டார்ட்'', ''கட்'' என்று சொல்ல வேண்டும் என்று கூடத் தெரியாமல் விழிப்பார்.

இது என்ன அநியாயம் என்று நினைத்தேன். சரி, சம்பந்தப்பட்ட எடிட்டரே வாயைத் திறக்காதபோது நான் ஏன் தலையிட வேண்டும் என்று இருந்து விட்டேன். படம் ஒழுங்காக வந்தால் சரி என்று நினைத்துக்கொண்டேன்.

ஆனால் அதுவும் நடக்கவில்லை. படம் ஏழாயிரம் அடி வரை வளர்ந்திருந்தது. என்னைத் தவிர அதில் நடிக்கும் மற்ற நடிகர் நடிகையர் யாருக்குமே அந்தத் தயாரிப்பாளர் ஒழுங்காகப் பணம் கொடுக்கவில்லை. படம் பாதிக்கு மேல் வளர்ந்துவிட்ட நிலையில், பணம் கொடுத்தால் ஒழிய மேற்கொண்டு நடிக்க வரமாட்டோம் என்று அவர்கள் எல்லோரும் திட்டவட்டமாகக் கூறிவிட்டார்கள்.

இந்தத் தயாரிப்பாளருக்கு ஒரு யோசனை பிறந்தது. எந்த எந்த நடிகர் வரவில்லையோ, நடிகை வரவில்லையோ, அவர்களுடைய கதா பாத்திரங்களை அத்தோடு ''க்ளோஸ்'' பண்ணி விட்டார். ஒரு அம்மா வேடத்தில் தோன்றிய நடிகை நடிக்க மறுத்ததால் அவர் கேரக்டரைச் சாகடித்து விட்டார்! அதற்குப் பதிலாகச் சம்பந்தமில்லாமல் திடீரென்று ஒரு பாட்டி வேடத்தை உருவாக்கி அதில் வேறொரு நடிகையை நடிக்க வைத்தார்.

கதைக்கு முக்கியமான நகைச்சுவை நடிகரைப் பாதிக்கு மேல் 'அம்போ' வென்று விட்டு விட்டார். அப்பாவுக்குப் பதிலாகத் திடீரென்று பெரியப்பா தோன்றினார்.

நான் வேறு வழியின்றிப் பல்லைக் கடித்துக் கொண்டு படத்தை முடித்துக் கொடுத்தேன்.

நான் எதிர்பார்த்தபடியே அந்தப் படம் வெளி வந்ததும் படுதோல்வி அடைந்தது. ஆரம்பத்தில் கதையின் மேல் உண்டான மோகத்தின் காரணமாகத்தான் அதில் நடிக்கவே சம்மதித்தேன். அந்த அருமையான கதையை அப்படியே எடுத்திருந்தால் படம் நிச்சயம் வெற்றிகரமாக ஓடியிருக்கும். ஆனால் கன்னா, பின்னா என்று மாற்றி, அதை உருத் தெரியாமல் அடித்தது எனக்குப் பெரிய ஏமாற்றமாக இருந்தது.

ஒரு நல்ல இயக்குனர் அந்தப் படத்தை டைரக்ட் செய்திருந்தால், நிச்சயம் அப்படியெல்லாம் நடக்க அனுமதித்திருக்க மாட்டார்.

அப்புறம்தான் எனக்கு உண்மை தெரிந்தது. ஆரம்பத்திலிருந்தே, தானே அந்தப் படத்தை டைரக்ட் செய்ய வேண்டுமென்று தயாரிப்பாளர் திட்டம் போட்டிருந்தார். முதலில் நான் வற்புறுத்தியதற்காக ஒரு பிரபல டைரக்டரை ஒப்பந்தம் செய்துவிட்டு, பிறகு வேண்டுமென்றே அவர் அதிலிருந்து விலக வேண்டுமென்று அவருடன் தகராறு செய்திருக்கிறார். அதன் பிறகு மூன்று நான்கு டைரக்டர்களை அவர் கேட்டதாகச் சொன்னதும் அப்பட்டமான பொய் என்பது படம் முடிந்த பின் எனக்குத் தெரிய வந்தது.

அதே தயாரிப்பாளர் சென்ற ஆண்டு எனக்கு போன் செய்தார். ''மீண்டும் நடிக்கப் போகிறீர்களாமே? உங்களை வைத்து ஒரு படம் எடுக்க விரும்புகிறேன். அது சம்பந்தமாக நான் உங்களைச் சந்தித்துப் பேச வேண்டும்'' என்றார். ''அய்யோ! வேண்டாம்! உங்களுக்குக் கோடி நமஸ்காரம். என்னை விட்டுவிடுங்கள்'' என்று போனை வைத்து விட்டேன்.

# நட்சத்திர வடிவம் பரிசுத்திட்டம்-4 போட்டி முடிவு



ரத்தியின் முழு உருவத்தையும் சரியான படி ஒட்டி அனுப்பியவர்கள் இரண்டே பேர்கள்தான்.

1. வி. ரவீந்திரபாபு, 24A/2, செயின்ட் தாமஸ் தெரு, காமராஜபுரம், பட்டாபிராம், சென்னை-72. (2) வி. தாமோதரன், மே-பா. செ. வரத ரெட்டியார், எரகுடி போஸ்டு, துறையூர் தாலுக்கா, திருச்சி மா. வ.

மிஞ்சும் தொகை ரூ. 200-

ஜாக்பாட்டுக்கு (11வது போட்டி) சேர்ந்துள்ள மொத்த தொகை ரூ. 675/-

ஜாக்பாட்டுக்குச் சேர்ந்துள்ள புகைப் படங்கள்: 27.

ஆசிரியர்: கல்கி

புகைப்படம்: ஏ. சுந்தரம்


அம்மாவுக்கு இந்த காரை விட அந்த வண்டி வசதியா இருக்குமே!
ஜனாதிபதி ஆட்சி முறை


அழாதேம்மா.. கதை சொல்றேன், கேளு..
ஒரே ஒரு ஊர்லே...
ஒரு மொட்டை நயான் ...





# செய்திகள் வாசிப்பது, செம்பியன்



தமிழகத்தில் ஆந்திர, மலையாள சகோதரர்களை இரு கரம் நீட்டி வரவேற்கிறோம். ஆனால் தமிழகத்தில் தமிழர்களே சிறுபான்மையினராகிவிடும் அளவில் ஆந்திரரோ கர்நாடகத்தவரோ குடியேற ஆரம்பித்தால் பொறுப்போமோ? சிந்தித்துப் பாருங்கள். அத்தகைய நிலைதான் இன்று வடகிழக்கு எல்லைப்புற மாநிலங்களில் நிலவுகிறது. இதையொட்டி அஸ்ஸாமில் ஆரம்பித்த கிளர்ச்சி அப்பகுதியில் மற்ற மாநிலங்களுக்கும் பரவி விட்டது.

இந்தச் சிக்கலைப் புரிந்து கொண்டு அனுதாபத்துடன் நடந்து கொள்வதை விடுத்து, முதலில் ''ஆர் எஸ். எஸ். தூண்டி விடுகிறது'' என்றார்கள்; பிறகு சி. ஐ. ஏ. மீது பழி சுமத்தினார்கள்; அப்புறம் ''அயல் நாட்டவர்'' என்று ஒட்டு மொத்தமாகக் கூறினார்கள். இப்போது ''பிரிவினைச் சக்திகளின் சூழ்ச்சி'' என்கிறார்கள். எல்லைப்புற மாநிலம் என்பதாலோ என்னவோ டில்லியின் பிதற்றலுக்கு ஓர் எல்லையே இல்லாமல் போய்விட்டது.

பிரதமரின் அணுகுமுறை தொடக்கத்திலிருந்தே தவறாக இருந்து வருகிறது. மக்களின் கிளர்ச்சியை ஏதோ தமது ஆட்சிக்கு எதிரான புரட்சி போல் பாவித்து மாற்றுத் தரப்பினரையும் தூண்டி விடுவதும், பிறகு அடக்குமுறையைக் கையாள்வதும் நிலைமையை விபரீத எல்லைக்குக் கொண்டு போய் விட்டிருக்கிறது. இந்தியா, இந்தியர்கள் மீதே போர் தொடுக்க முடியாது என்று பிரதமர் புரிந்துகொள்ளட்டும்.

• • •

குஜராத் முதல்வர் மதுவிலக்கு தீவிரமாக அமல்படுத்தப்படும் என்று சொல்லியிருக்கிறார். நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே. இந்திரா காங்கிரஸ் அரசு செய்தாலும் நன்மை நன்மையே. வாழ்த்துவோம்.

• • •

கட்டுப்பாடு: திண்டிவனத்தில் 'விசில்' தோழர்கள் விளையாடியிருக்கிறார்கள். எம். ஜி. ஆரின் பதவி ஏற்பு வைபவத்துக்கு வந்து விட்டுத் திரும்பும்போது ரயில்வே ஸ்டேஷனில் உணவு விடுதியைச் சூறையாடியிருக்கிறார்கள். இதற்கு மறுபுறமாக தி.மு.க. ஆதரவாளர்கள், லாரியில் ஊர் திரும்பிக் கொண்டிருந்த அ. தி. மு. க. தொண்டர்களைத் தாக்க, நடக்கக் கூடாத அசம்பாவிதங்கள் நடந்துள்ளன.

கண்ணியம்: கலைஞர் சிலையைச் சுற்றி அமர்ந்து அ.தி.மு.க. தொண்டர்களின் ஒப்பாரி.

கடமை: கட்டுப்பாடும் 'கண்ணியமும் படும் பாட்டைப் பார்த்துவிட்டும் கடமை பற்றிக் கேட்பது மடமை.

• • •

பெட்ரோல், டீசல் விலை உயர்வையொட்டி அரசுத் துறையிலோ, தனியார் துறையிலோ எந்தக் காரோ, ஸ்கூட்டரோ, பஸ்ஸோ, லாரியோ, டாக்ஸியோ ஓடாமல் நின்று விடப் போவதில்லை. எனவே, அரசாங்கத்தில் அதிகரிக்கும் செலவினங்களை ஈடுகட்ட வரிகள் உயரும். தனியார் துறையில் அதிகரிக்கும் செலவினங்களை ஈடுகட்ட பண்டங்களின் விலை உயரும். ஆக, பெட்ரோல், டீசல் விலை உயர்வை முழுக்க முழுக்கத் தாங்கப் போவது ஸ்ரீமான் பொதுஜனம்தான். இந்த லட்சணத்தில் ''கெரசின் விலை உயரவில்லை'' என்று சுட்டிக் காட்டி அவரைக் குஷிப்படுத்துகிறது அரசு. கிக கிக கிக கிக. எங்கே சிரியுங்கள், பார்க்கலாம்.

• • •

பெட்ரோலியத்தை வெளி நாட்டிலிருந்து அதிக விலைக்குத் தருவித்துவிட்டு இங்கு குறைந்த விலைக்கு அரசு விற்க முடியாது என்று காரணம் கூறுகிறார் பிரதமர். சரிதான். ஆனால் அது தவிர பெட்ரோலியத்திலிருந்து பிரித்தெடுக்கப்படும் பல்வேறு பொருள்கள் மீது ஆண்டொன்றுக்கு 1314 கோடி ரூபாய் வரி விதித்து வசூல் செய்கிறீர்களே அதில் கொஞ்சம் சலுகை காட்டக் கூடாதா என்று பொதுஜனம் கேட்கலாமோ? மூச். விலை உயர்வையே எடுத்துக் கொண்டாலும் அதில் அரபு நாட்டவர் உயர்த்தியது எவ்வளவு, நமது தேசத்தின் சுத்திகரிப்பு ஆலைகள் திறம்பட இயங்காததால் உயர்வது எவ்வளவு என்றும் கணக்குக் கேட்கக் கூடாதுதான். பிரதமருக்குப் பிடிக்காத வினாக்கள் இவை.

• • •

ரொம்பப் பேருக்குத் தெரியாது! மூன்றாம் உலக யுத்தம் வந்து அது அணு ஆயுதப்

சென்னா ரெட்டி



இந்திரா



1980 ஜூன் 22
ரௌத்திரி ஆனி 8
மலர்: 38 இதழ்: 47

கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

போராகவும் விளங்கிக் கிட்டத்தட்ட உலகம் முழுவதுமே அழிந்துபடக் கூடிய ஆபத்து ஜூன் 3ந் தேதி ஏற்பட்டது. காரணம் என்ன தெரியுமா? அமெரிக்காவில் பாது காப்புத் துறைக் கம்ப்யூட்டர்களில் ஒன்று பழுதுபட்டுப் போயிற்று. அது, அணு குண்டுகளைத் தாங்கிய ருஷ்ய ஏவுகணைகள் அமெரிக்கா நோக்கிப் பறந்து வந்துகொண் டிருப்பதாகத் தெரிவித்தது! உடனே அமெ ரிக்கா பதிலுக்குப் போர் ஆயத்தம் செய்யத் தொடங்கி விட்டது! நல்லவேளை, கடைசி விநாடியில் இறையருளால் தவறு கண்டு பிடித்துத் திருத்தப்பட்டது. உலகம் அழிவி லிருந்து தப்பியது.

கோபாலகிருஷ்ணன்
கற்பகம்

வாலி
கலியுகக்கண்ணன்

நிலைமை இவ்வாறிருக்க இந்தியாவும் அணு குண்டு தயாரிக்கும் என்று மார் தட்டு வதில் என்ன பயன்? அந்த உரிமையை நாமே விட்டுக் கொடுத்து, வல்லரசுகளைக் கட்டுப்படுத்தக்கூடிய தார்மீக பலத்தைப் பெற வேண்டும்.

• • •

கர்நாடக மாநிலம் தொழில் வளர்ச்சியில் எந்த அளவுக்கு முன்னேறி யிருக்கிறது— நமக்குத் தெரியும். பூங்கா நகர் என்று அழைக்கப்பட்ட பங்களூர் இன்று தொழில் நகர் ஆகிவிட்டது. இருப்பினும் கர்நாடகா புதிய தொழில்கள் தொடங்குவதற்கு வரிச் சலுகைகளை அளித்திருக்கிறது.

தமிழகமோ இங்கு நிறுவப்படவிருந்த தொழில்களையும் அசிரத்தை காரணமாக இழந்துவிட்டு நிற்கிறது. இதற்கு ஆர்.வி.யே சாட்சியம் கூறியிருக்கிறார்.

''தாங்காதே தம்பி தாங்காதே'' என்று யார் யாரைப் பார்த்துப் பாடுவது? புரிய வில்லை!

• • •

சென்னா ரெட்டி கூறினார், பிரிட்டிஷ் பாணி ஜனநாயகம் இங்கு உருப்படியாகச் செயல் படாது; அமெரிக்கா, பிரான்ஸ் போன்று ஜனாதிபதிக்கு அதிகாரம் வழங்கும் ஜனநாயகம்தான் நம் தேசத்துக்கு ஏற்றது என்று.

சென்னா ரெட்டி கூறியது ஒன்றும் புதி தில்லை. ஏற்கனவே டாட்டா, பால்கிவாலா போன்றோர் கூறிய ஒன்றுதான். ஆனால் அவர்கள் கூறும்போது தொனிக்காத உள் அர்த்தங்கள் சென்னா ரெட்டி கூறும்போது தொனிக்கின்றன.

எனவே, எதிர்க் கட்சித் தலைவர்கள் பலர் பிரதமரிடம் ''ஜனநாயகப் பாதையிலிருந்து பிறழ மாட்டேன்'' என்று உறுதிமொழி அளிக்குமாறு கோரியுள்ளது நியாயமே!

• • •

சமீபத்திய மாநிலத் தேர்தல்களில் இந்திரா காங்கிரஸுக்கு அடுத்தபடியாக அதிக தொகுதிகளில் வென்றிருப்பது பாரதிய ஜனதா கட்சியே. மத்தியப் பிரதேசம், ராஜஸ்தான் ஆகிய இரு மாநிலங்களில் பிரதான எதிர்க் கட்சியாக விளங்குகிறது. வாழ்த்துகிறோம்.

தொடர்ந்து அதன் தலைவர்களும் தொண் டர்களும் கண்ணியம் காத்து ஆரோக்கிய மான ஜனநாயகம் நாட்டில் தழைக்கப் பாடு படட்டும்.

கோவி. மணிசேகரன்
தென்னங் கீற்று

ஜெயகாந்தன்
சில நேரங்களில்
சில மனிதர்கள்

சுதாங்கவம்
மீரா

சுப்பு
ஔவையார்

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




**காம்ப்ளான்®**
**ஒன்றில்தான்**
**அவர்களுக்கு**
**அன்றுடம் தேவைப்படும்**
**23 ஊட்டச் சத்துக்கள்**
**அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தை-
களுக்கென்றே
சிறப்பான சில
தேவைகள்
உள்ளன—வளரும்
வயதிலே உடம்புக்குத்
தேவைப்படும்
மிகச் சிறந்த புரதம்,
22 மூலாதார
ஊட்டச் சத்துக்கள்
—அளிக்கிறது
காம்ப்ளான். மறவாதீர்கள்,
டாக்டர்களின் சிபாரிசு
பெற்ற, திட்டமிட்ட உணவு
காம்ப்ளான்.

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

"குடும்பத்திற்கான பரிபூரண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி"
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக :
தபால் பை எண் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

லின்டாஸ்—GLC-6-3012 TM

## திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®




**க**ல்கி—சாரதாஸ் பட்டுப் புடவை பரிசுத் திட்டத்தில் கலந்துகொண்ட பல்லாயிரக் கணக்கான கல்கி வாசகப் பெண்மணிகளுக்கு நன்றி சொல்ல வேண்டும். அவர்கள் அனுப்பிய கூப்பன்களைப் பெரிய பெரிய மூட்டைகளாகக் கட்டி எடுத்துப் போய் ஜெயலலிதா அவர்கள் இல்லத்தை அடைந்து ஆறுதல் பரிசுக்குரிய அதிர்ஷ்டசாலிகளைத் தேர்ந்தெடுக்குமாறு வேண்டினேம். அப்போது பேச்சினிடையே கல்கி விடுமுறைச் சிறப்பு மலரில் வெளியான அவரது புகைப்படத்தைப் பற்றிக் குறிப்பிட்டேன்.

''' ஒரு நாள் ஓய்வு கிடைத்தாலும் எனது நூலகத்தில் அமர்ந்து மணிக் கணக்காகப் புத்தகங்களைப் படித்துக் கொண்டிருப்பதைத்தான் நான் விரும்புகிறேன்' என்று சொல்லியிருந்தீர்கள். படத்திலும் உங்கள் நூலகம் அப்படியே இடம் பெற்றுள்ளது. குறைந்தது ஓராயிரம் புத்தகங்களாவது இருக்கும் போலிருக்கிறதே'' என்றேன்.

''எண்ணிப் பார்த்ததில்லை. சின்ன வயதிலிருந்தே நாவல்களையும் இதர நூல்களையும் வாங்கி வாங்கிச் சேகரித்து வந்திருக்கிறேன்.''

''இவ்வளவு படிக்கும் உங்களுக்கு, துக்ளக்கில் எழுதிவரும் கட்டுரைகள் தவிர ஏதாவது சிறுகதையோ, நாவலோ எழுத வேண்டும் என்று தோன்றவில்லையா?'' என்று கேட்டு வைத்தேன்.

''ஆமாம். இப்போகூட ஒரு நாவல் எழுதி முடித்திருக்கிறேன். ஆங்கிலத்தில் எழுதியிருக்கிறேன். ஈவ்ஸ் வீக்லிக்கு அனுப்பி வைக்கலாம் என்ற எண்ணம்'' என்றார்.

''என்னிடம் கொடுங்களேன், கல்கிக்குப் பயன்படுமா பார்க்கிறேன். மொழிபெயர்த்துக்கொண்டால் ஆயிற்று'' என்றேன்.

''அந்தச் சிரமம் உங்களுக்கு வேண்டாம். பிடித்திருந்தால் சொல்லுங்கள். நானே தமிழில் எழுதித் தருகிறேன்'' என்றார் ஜெயலலிதா.

நாவலைப் பிரசுரிப்பது என்பது தீர்மானமான பிறகு அது ஆரம்பமாகும் இதழைத் திரை உலகுடன் சம்பந்தப்பட்ட ஒரு சிறப்பிதழாகக் கொணர்ந்தால் என்ன என்று தோன்றியது. அதற்கு நல்ல யோசனைகள் கூற அத்துறையில் நெடு நாள் அனுபவம் உள்ள ஜெயலலிதாவையே அணுகினால் என்ன என்றும் எண்ணினேன். மறுமுறை அவரைச் சந்தித்து, ''உங்கள் தொடர் கதை ஆரம்பமாகும் இதழை நீங்களே தயாரித்து விடுங்கள்; திரை உலகில் ஏதேனும் ஓர் அம்சம் பற்றி அந்த இதழில் சிறப்பாகக் கூறுவோம்'' என்றேன்.

ஜெயலலிதா உடனே உற்சாகமாக, ''திரைக் கதைச் சிறப்பிதழாகச் செய்யலாமே'' என்றார். அதற்குக் காரணத்தையும் விளக்கினார்: ''திரைக் கதைதான் திரைப் படத்தின் வெற்றிக்கு அஸ்திவாரம் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனாலும் பாருங்கள் சமீப காலம் வரை படத் தயாரிப்பாளர்கள் கதாசிரியருக்கு முக்கியத்துவம் தராமலே இருந்து வந்தனர். இப்போதுதான் அபூர்வமாக ''சிவசங்கரியின் நாவல் திரைப் படமாகிறது'' என்று கதாசிரியரைக் கொண்டாட ஆரம்பித்துள்ளார்கள். ஆக எழுத்தாளருக்கு நட்சத்திர அந்தஸ்து உருவாகி வருகிறது. வடக்கேயும் சமீப காலமாக 'ஸலீம் ஜாவேத் பிரஸெண்ட்ஸ்' என்று படத்தின் பெயருக்கு மேலேயே எழுத்தாளர் பெயரைக் குறிப்பிடுகிறார்கள். அவர்கள் கதை என்றால் படம் வெற்றி என்ற அளவுக்கு மதிப்பு மிகுந்திருக்கிறது!''

''ரொம்ப சரி, திரைக் கதைச் சிறப்பிதழாகவே வெளியிடுவோம்'' என்று நானும் மகிழ்ச்சியோடு ஒப்புதலளிக்க, அதைத் தொடர்ந்து இரு தினங்களில் சந்தித்து, இந்த இதழை எவ்வாறு உருவாக்கலாம் என்று விவாதித்தோம். பல அருமையான யோசனைகளை ஜெயலலிதா கூறியதுடன் தாமே ஒரு கட்டுரையையும் எழுதியளித்தார்.

உங்கள் கரத்தை அலங்கரிக்கும் இந்தச் சிறப்பிதழின் தயாரிப்பில் ஒத்துழைத்த திரை உலகப் பிரபலஸ்தர்கள் தவிர, சவன், பிலிம் நியூஸ் ஆனந்தன், அன்பு, சிக்கி, பி. ரங்கநாயகி ஆகிய எழுத்தாளர்களுக்கும் கடமைப்பட்டிருக்கிறேன்.

கல்கி—சாரதாஸ் பட்டுப் புடவை பரிசுத் திட்டத்தில் பட்டுப் புடவை பரிசு பெறுவோரின் பெயர்கள் அடுத்த வாரக் கல்கியில் இடம் பெறும். பட்டுப் புடவை பரிசோ, ஆறுதல் பரிசோ பெறாத பெண்மணிகள் கொஞ்சமும் வருந்த வேண்டாம். 'இந்தச் சிறப்பிதழ் உருவாகவும், குமாரி ஜெயலலிதாவின் 'உறவின் கைதிகள்' தொடர்கதை கல்கியில் இடம் பெறவும் நாம்தான் காரணம் என்ற அளவில் பெருமிதப்படலாம்!

ஆசிரியர், கல்கி

மேலட்டை ஜெயலலிதா வண்ணப் படம்:

எம். கே. ராமமூர்த்தி

சில நாட்களுக்கு முன் வெளியான பத்திரிகை செய்தி :—

தம்பதியை வழி மறித்து நான்கு கயவர்கள் மனைவியை மட்டும் இழுத்துச் சென்று அவளை மான பங்கப் படுத்தி அனுப்பி விட்டனர். வீடு திரும்பிய அவள் அவமானத்தில் தற்கொலை செய்து கொண்டாள்.

இச்செய்தி பின்னால் மறுக்கப்பட்டது.

ஆனால் —

இதில் ஒரு கதை 'கரு' நமக்கு அகப்படுகிறது.

இதை ஆதாரமாக வைத்து எப்படி கதையைத் தொடரலாம் எவ்வாறு முடிக்கலாம்? சில நிரைக்கதை வாசகர்த்தாக்களைக் கேட்டோம். அவர்கள் தங்கள் கற்பனையை ஓட விட்டுத் தங்கள், தங்கள் மனோதர்மப்படி கதையை முடித்து வைக்க, சேகரித்து அளிப்பவர் : அன்பு.

இந்த வாரம் எழுதுகிறவர் : காரைக்குடி நாராயணன்.

**வா**சலில் ஸ்கூட்டர் சத்தம் — வீட்டின் கதவைத் தாரா திறக்கிறாள். யாரவள்? ராதாவின் தங்கைதான். அவளைப் போலவே அச்சிட்ட வார்ப்பு.

ஸ்கூட்டரிலிருந்து ராதா, ராதாவின் கணவன் விஜயராகவன், குழந்தை செல்வி மூவரும் இறங்கி வீட்டுக்குள் வருகிறார்கள். செல்வி தாயின் தோளில் அரவணைத்துக் கொண்டு சின்னப் புறா போல் தூங்குகிறாள். அவளுக்கென்ன இந்தப் பிரச்னையைப் பற்றி?

தாரா, ராதாவையும் விஜயராகவனையும் மாறி மாறிப் பார்க்கிறாள்.

''ஏக்கா ரெண்டு பேரும் ஒரு மாதிரியா இருக்கீங்க?''

''ஒண்ணுமில்லே தாரா. சினிமாப் பார்த்துப் பயந்திட்டா.'' — விஜயராகவன் தடுமாறிச் சமாளித்தான்;

''அக்கா பொம்புளே — பயந்திட்டா. உங்களுக்கென்ன? நீங்களுமா பொம்புளே?''

தன்னை 'ஆம்புளே' என்று ஒத்துக்கொள்ள முடியாத நிலையில் விஜயராகவன் படுக்கையறைக்குச் சென்றான்.

''செல்விக்குப் பால் காய்ச்சி இருக்கியா தாரா?''

''காய்ச்சினேன் அக்கா. பால் திரிஞ்சு போச்சு; கெட்டுப்போன பாலைக் கீழே கொட்டிட்டேன்.''

தாரா சாதாரணமான நிகழ்ச்சியை சாதாரணமாகச் சொல்லிவிட்டாள். ஆனால் ராதாவின் நெஞ்சில் அது விஷமாய் இறங்கியது.

படுக்கை அறையில் படுத்தும் தூக்கம் வராத நிலையில் இருவர் நெஞ்சமும் நினைவுகளைப் பம்பரமாய்ச் சுற்றியது.

''ராதா ''

''ம்.....''

''நான் ஆம்புளேயா இருந்தா உன்னைக் கற்பழிக்க இழுத்துச் சென்றதை என் கண்ணாலே பார்த்துக் கிட்டிருப்பேனா. நான் கோழை, கையாலாகாதவன்.''

''அப்படிச் சொல்லாதீங்க. நீங்க ஆம்புளேயா இருந்ததாலேதான் ரெண்டு வருஷத்துக்கு முன்னாலே இதே சூழ்நிலையிலே என்னைக் காப்பாத்தினீங்க.'' — கண்கள் கலங்கிய நிலையில் அந்தச் சம்பவம் நிழலாடுகிறது.

வீதி விளக்குகள் அனாதைக் குழந்தைகள் போல் எரியாமல் நிற்கின்றன. ராதா இரவு ஆபீசிலிருந்து நடந்து வருகிறாள். திடீரென்று இரண்டு தெருப் பொறுக்கிகள் அரிவாளுடன் அவள் முன் தோன்றி அச்சுறுத்தி அவள் கற்பைச் சூறையாட முயலுகிறார்கள். இந்தச் சமயம் அங்கு ஸ்கூட்டரில் வந்த விஜயராகவன் அவளைக் காப்பாற்றுகிறான். அந்தப் போராட்டத்தில் விஜயராகவனின் இடது காலை அவர்கள் வெட்டி விடுகிறார்கள். இந்த நிகழ்ச்சியின் நெகிழ்ச்சிதான் இருவரின் வாழ்வுப் பிணைப்பு. இதை நினைத்தவள் அவன் கால்களைத் தடவி முத்தமிட்டு அழுகிறாள். கற்பைத் தெய்வமாக நினைக்கும் ஒரு பெண் அழாமல் என்ன செய்வாள்?

அடுத்த நாள் பொழுது நெருப்பாய்க் கொதித்தே புறப்படுகிறது. — திடீரென்று



'பாத்ரூமில்' தீயின் பிழம்பு பரவுகிறது. ராதாவின் அலறல் கேட்கிறது. விஜய ராகவன் பதறிப்போய்க் கதவைத் திறக்கிறான். அங்கே மண்ணெண்ணெயை உடலில் ஊற்றிக் கொண்டு தீயில் அக்கினி புஷ்பமாய்க் கருகியிருக்கிறாள் ராதா.

அக்கினி வலம் வந்து அன்பு வாழ்க்கையை ஏற்றுக் கொண்டவள் அக்கினியில் தன்னைச் சங்கமித்துக் கொண்டாள். அட்சதை அரிசி போட்டு ஆயிரம் ஆயிரம் பேர் வாழ்த்திய ராதாவின் பிணத்தில் வாய்க்கரிசி போட்டு வாழ்வரசியைக் காட்டிலே விட்டு வந்தனர்.

வீட்டில் நுழைந்ததும் ராதாவால் எழுதப்பட்ட ஒரு கடிதம் அஞ்சல் செய்யப்பட்டு வந்து கிடந்தது. விஜயராகவன் பிரித்துப் படித்தான்.

''அன்புள்ள அத்தான்,

நீங்கள் ஆம்பிளைதான். அதே நேரம் நான் கெட்டுப் போனவள்தான். கெட்டுப்போன எந்தப் பொருளையும் வீட்டில் வைக்காதே, தூக்கி வெளியே எறி என்று எத்தனையோ தடவை சொல்லி யிருக்கிறீர்கள். அப்படி இருக்க, கெட்டுப் போனவள் இருக்கலாமா? கற்பு பறிபோன பின் காலமும் மனிதர்களும் எவ்வளவுதான் ஆறுதல் சொன்னாலும் அதை வாழ்வாக என்னால் கருத முடியவில்லை. நீங்கள் என் மகள் செல்விக்காக என் தங்கை தாராவைத் திருமணம் செய்து கொள்ளுங்கள். என்ன யோசிக்கிறீர்கள்? எனக்கும் அவளுக்கும் மிகவும் வித்தியாசம் இல்லை. நான் ராதா. அவள் தாரா. ஒரு எழுத்துத் தான் வித்தியாசம்''

'கற்பு என்ன மண்ணாங்கட்டி. கடைதோறும் அது ஒரு ரூபாய்க்கு மூன்று கிடைக்கிறது! இதை வாங்கினால் போதும். கற்பு அரியாசனம் ஏறிவிடும்' என்று உருவாகும் ஒரு சமுதாயத்தைச் சிந்திக்க வைக்கும் ஒரு சிறந்த புத்தகமாய் ராதா பெண்களின் மனத்தில் என்றும் வாழ்வாளாக!

அடுத்த வாரம்: எஸ். ஜெகதீசன் எழுதுகிறார்.

# இந்த வசனம் எந்த படத்தில்?

நீண்ட நாள் தமிழ்ப் பட ரசிகர்களுக்கு ஒரு சிறிய போட்டி. கீழ்க்கண்ட வசனங்கள் அந்தப் படங்களில் சிறப்பாக இருந்தன. பத்திரிகை சினிமா விமர்சகர்களால் பாராட்டப்பட்ட இந்த வசனங்கள் எந்தெந்தப் படத்தில் இடம் பெற்றன? எங்கே கொஞ்சம் நினைவுக்குக் கொண்டு வாருங்கள். இல்லாவிட்டால் விடையைக் கீழே பாருங்கள்.

- ''எங்கே ஓடுகிறாய்?''
''இந்த உலகத்தைக் கண்டு பயந்து!''
''இந்த உலகம் உனக்கிழைத்த தீங்கு?''
''அது நல்லவர்கள் வாழ இடம் கொடுப்பதில்லை!''

- ''பணத்திற்குப் பத்தினியாகவே வாழத் தெரியாதோ? ஒரு நாள் என்னிடம் இருக்கிறாள். இன்னொரு நாள் என் அண்ணனிடம் இருக்கிறாள்!''

- ''என் இரு கண்களை உன்னிடம் ஒப்படைக்கிறேன். அதில் ஆனந்தக் கண்ணீர்தான் வரவேண்டும்.
''ஜாதி பேதம் என்ற சுவர். அதற்குத் தரித்திரம் என்ற கதவு. என்ன உலகம்? என்ன மனிதர்கள்?''

- ''வசதியோடு வாழ்ந்து கொண்டு இருக்கும் வரைதான் வைரம் காதிலும் கழுத்திலும் மின்ன வேண்டும். வசதி குறைந்து விட்டால் வைரம் நெஞ்சில் இருக்க வேண்டும்.''

- ''வானத்தை முட்டும் மாளிகைகள். மானத்தை மறந்த மனிதர்கள். உயர்ந்த கோபுரங்கள்; தாழ்ந்த உள்ளங்கள்!''

- ''அப்பா என்பதற்காகவோ, அல்லது நிறைய பொருள், பணம் கிடைக்கும் என்பதற்காகவோ, மனமறிந்த அநியாயத்துக்கு உடந்தையான ஒரு ஈனத் தொழிலை எங்களைப் போன்ற இளைஞர்கள் செய்யமாட்டார்கள். எங்கள் ரத்தம் ஜீவனுள்ளது. அநியாயத்தை அநியாயம் என்று சொல்லத் தயங்க மாட்டோம். வீரத் தமிழ் ரத்தம் ஓடுகிறது எங்கள் உடலில்.

– தொகுப்பு: டி. எஸ். சீதாராமன்

விடைகள்:

படம்: மர்ம யோகி. வசனம்: ஏ. எஸ். ஏ. சாமி
படம்: அலிபாபா 40 திருடர்கள். வசனம்: ஏ. எல். நாராயணன்.
படம்: பாச மலர். வசனம்: ஆரூர் தாஸ்.
படம்: வேலைக்காரி. வசனம்: அறிஞர் அண்ணா.
படம்: குலதெய்வம். வசனம்: முரசொலி மாறன்.
படம்: பராசக்தி வசனம்: கலைஞர் மு. க.
படம்: நாம் இருவர் வசனம்: ப. நீலகண்டன்.

# வட்டமேஜை



● அனைத்திந்திய ரீதியில் சட்ட சபைத் தேர்தல்கள் உங்களுக்கு இனிக்கவில்லை. காரணம் இந்திரா காந்தி பெற்ற வெற்றி. தமிழகத்தைப் பொறுத்த வரையில் பாமர மக்கள் என்று எண்ணப்படுகிறவர்கள் அப்படியொன்றும் விஷய ஞானம் இல்லாதவர்கள் அல்ல என்று நிரூபிக்கப்பட்டுள்ளதென்கிறீர்கள். காரணம் இந்திரா அணி இங்கே — இப்போது தோற்றுள்ளது. உங்கள் தராசு பிரதேசத்துக்குப் பிரதேசம் மக்களை வித்தியாசமாய் எடை போடுகிறதே!

மதுரை பி. ஸ்ரீராம்

"தமிழகத்தில் போல, வேறு சக்தி வாய்ந்த மாற்றுக் கட்சியும் அதனை மையமாகக் கொண்ட கூட்டணியும் இல்லாத நிலையில் இந்திரா காங்கிரஸ் வட மாநிலங்களில் சட்ட மன்றங்களில் பெரும்பான்மை பெற்றதில் வியப்பில்லை" என்று தான் தலையங்கம் கூறுகிறது. முக்கியமான வார்த்தைகளை இருட்டடிப்பு செய்கிறீர்களே ஸார்!

இந்தச் சட்டமன்றத் தேர்தலில் மொத்த வாக்காளர்களில் நாற்பது சதவீதத்தினரே வோட்டளிக்க முன் வந்தார்கள் என்பதும், தொகுதி வாரியாகப் பார்த்தால் இத்தேர்தலில் இந்திரா காங்கிரஸ் கடந்த நாடாளுமன்றத் தேர்தலை விடக் குறைந்த அளவு தொகுதிகளிலேயே வென்றிருக்கிறது என்பதும் கவனத்துக்குரியது.

ஆர்.

● இன்னும் கொஞ்ச நாள் பொறுத்துப் பாருங்கள். இதே எம். ஜி. ஆர். இந்திராவுக்கு அடிமையாகி உமது முகத்தில் கரி பூசப் போகிறார். அப்போதும் உமது தலையங்கத்தை நேர்மையான முறையில் எழுதுவீர் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன்.

மேட்டுப்பாளையம் பி. பீட்டர்

இதுபற்றிய எச்சரிக்கை இந்தத் தலையங்கத்திலேயே இருக்கிறதே!

ஆர்.

● தேர்தலுக்கு முன்பே கார்ட்டூனில் சித்திரித்திருந்ததைப் போன்று அண்ணா நகரில் டாக்டர் கலைஞர் முரட்டுக் காளையாம்



கன்னியாகுமரி மா. வ., மார்த்தாண்டம் நேயர் எம். டி. நாயர், முன்பு நகைச்சுவை சிறப்பிதழில் உமாபதி வரைந்த ஓவியத்தைப் புதிய சூழ்நிலைக்கு ஏற்பச் சற்று மாற்றி அனுப்பியுள்ளார்!

ஓரிஜினல் டாக்டர் ஹாண்டேயிடம் சிக்கித் திணறித் தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஒரு வழியாக வெற்றிக் கோட்டைத் தொட்டிருக்கிறார்.

சென்னை-78 "ஜரத்"

● எவரையும் நம்பாமல் மக்கள் பிரச்னைகளை உடனுக்குடன் தீர்க்கும் செயல் திறனில்லாமல் இருக்கும் எம். ஜி. ஆர்., நித்தம் ஒரு அறிவிப்பு — நேரத்திற்கொரு கொள்கை என்ற அவரது நிலையற்ற தன்மை, திட்டங்களின் தேக்கம், பூதாகாரமான தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்ற தமிழகப் பொருளாதாரம் இடம் தராத சிக்கல் ஆகிய

---





ஏ. பி. நாகராஜன்
அரிவாள்

ஸ்ரீதர்
கல்யாணப் பரிசு

---

வற்றை நோக்கும்போது ''வெற்றி வாக்காளருக்கல்ல — எம். ஜி. ஆர். என்ற நடிகருக்குத்தான்'' என்றே முடிவுக்கு வரவேண்டியுள்ளது. இதை உம்மைப் போன்றவர்களே உணரும் நாள் வெகு தூரத்தில் இல்லை!
வேலாயுதம்பாளையம் — எம். சம்பத்

[இப்போதே உணர்ந்துதான் இந்தத் தலையங்கத்திலும் இவற்றைக் குறிப்பிட்டிருக்கிறோமே -ஆர்.]

● எம். ஜி. ஆர். அவர்களுக்கு மிகவும் சுருக்கமாக, அழுத்தம் திருத்தமாக அறிவுரைகள் எழுதப்பட்டுள்ளது குறித்து மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன்.
பெங்களூர், — 'சேக்'

● தமிழகத்தில் ஜனதா திரு எம். ஜி. ஆரின் கூட்டணியில் இருந்து பாடுபட்டிருந்தால் இ. காங். — தி.மு.க. கூட்டணி 15 இடங்களைக் கூடப் பெற்றிருக்காது. இதில் ஜனதா தன் பங்கைச் செய்யத் தவறிவிட்டது.
கல்லிடைக்குறிச்சி — கி. சுந்தரகுமார்

● இந்திரா காந்தி சஞ்சய் காந்தி தவிர மற்ற காந்திகளை மறந்துவிட்ட மக்களுக்கு தேவதாஸ் காந்தி மற்றும் ராஜ்மோகன் காந்தி புகைப்படத்துடன் கட்டுரை வெளியிட்டமைக்கு நன்றி.
பெங்களூர் — எஸ். எம். குப்தா

● அட்டைப் படத்தை அலங்கரிக்கும் குழந்தையின் தீவிர சிந்தனையைப் பார்த்தால் தன்னால் தன் தாய் தந்தைக்கு ஜூன் மாதத்தில் இப்படி ஒரு கஷ்டம் ஏற்பட்டுவிட்டதே என்பதைப் போல் இருக்கிறது. படம் மிக நன்றாக இருக்கிறது.
மேட்டுப்பாளையம் — பி.ஏ. வதாத்

● நோட்டுப் புத்தகங்கள் நியாயமான விலைக்குக் கிடைக்க அரசு ஆவன செய்ய வேண்டும் என்று கூறியுள்ளார் ஒருவர். இப்போது தமிழ் நாட்டுப் பாட நூல் நிறுவனம் நியாய விலையில் நோட்டுப் புத்தகங்களை வெளியிட்டுக் கூட்டுறவு நிலையங்கள் மூலம் விற்பனை செய்ய ஏற்பாடு செய்துள்ளது.
சிவகாசி — சிதம்பரச் செல்வி

● 'ஒரு மரம் நிழலைத் தேடுகிறது' கதை ஒரு வைணவ குடும்பச் சூழ்நிலையைத் தெளிவுபடுத்துகிறது. ஆராவமுதன், ஜானகி, நாராயணன், ராகவன் என்ற பெயர்களும், சமையற்காரர் 'என்ன தளிகை' என்று கேட்பதும் சான்றுகள். ஆனால் உமாபதி ஓர் ஐயர் குடும்பச் சூழ்நிலையைப் படத்தில் காட்டியுள்ளார். மேலும் 'ஆராவமுதன்' என்ற பெயரை எல்லா இடத்திலும் 'ஆராமுவதன்' என்று போட்டது ஏனோ?
நங்கைநல்லூர் — கி. சங்கர்

● வில்லன் பாத்திரத்தை ஏற்று நடித்துத் தயாரிப்பாளர் அந்தஸ்துக்கு உயர்ந்த பாலாஜி இப்போது வில்லனாக நடிக்க மறுப்பது ஏற்றிவிட்ட ஏணியை எட்டி உதைப்பது போல் இருக்கிறது.
மதுரை-1 — ஆர். கண்ணன்

● தேர்தலைப் பற்றி இளைய தலைமுறையினரின் உரையாடல்களை வெளியிட்டீர்கள். இப்போது இளைய தலைமுறை பலதுறை வல்லுனர்களை அறிமுகப் படுத்துகிறீர்கள். இளைய தலைமுறையினரிடம் கல்கிக்குத் தனிப் பரிவுதான்.
சென்னை—5 — கோடம்பூர் மணி

● விழுப்புரம் தேவராஜ் கேள்விக்கு 'நான் என்ன ஜூனியர் ராஜாஜியா' என்று கடுகடுப்பதில் நல்ல சமாதானமாக இல்லை. கல்கியே இப்படிப் பதில் சொல்லி விட்டால் ராஜாஜியின் கருத்தை யார்தான் சொல்வது?
சென்னை-1 — சித. வயிரவன்

[ராஜாஜியின் பொதுப்படையான ஜனநாயக தார்மீகக் கருத்துக்களை நாம் நினைவூட்ட முடியுமே தவிர இன்று தோன்றியுள்ள அஸ்ஸாம் பிரச்னை போன்றவற்றில் ராஜாஜியின் கருத்து என்னவாக இருக்கும் என்று ஊகிக்க முடியாது; கூடாது -ஆர்.]

---

''பொருத்தமற்ற காட்சி''

## ரிஷி மூலம்

தாயின் மேல் (கே. ஆர். விஜயா) பாசம் உண்டாக்கக் கருதித் தந்தை (சிவாஜி) பல முயற்சிகள் செய்து படம் விறுவிறுப்பாகப் போய்க் கொண்டிருக்கும் போது திடீரென்று ஒரு பாடல் ''ஐம்பதிலும் ஆசை வரும்''... இது அவசியம் தானா? படத்தின் விறுவிறுப்பைத் திடீரென்று தடை செய்யும் முட்டுக் கட்டையாக இது உங்களுக்குத் தெரியவில்லையா? அந்தத் தம்பதிகளின் மேல் நாம் வைத்திருக்கும் உயர்ந்த எண்ணத்தைத் திடீரென்று உருட்டிப் பாதாளத்தில் தள்ளுவதாகத்தான் இந்தப் பாடல் காட்சி அமைந்திருந்தது என்கிறேன் நான். உங்கள் பதில் என்ன?
பட்டுக்கோட்டை — பி. எஸ். ராஜகோபாலன்

ஐம்பதிலும் ஆசை வரும். 15 வருடங்கள் கழித்துக் கணவனும் மனைவியும் இணையும்போது அவர்களுக்கு வயதானாலும் அவர்களது ஆசைகளுக்கு வயதாகவில்லை என்பதை வலியுறுத்தவே அந்தப் பாடலை அங்கு இணைத்தோம். பலர் (வயதானவர்கள் கூட) ரசித்ததைத் தியேட்டரில் பார்த்தோமே.

-எஸ். பி. முத்துராமன்





# பிரச்னைகள் ஆயிரம்!

திரைக்கதை உருவாக்குவது படம் பிடிப்பது என்றால் பிரச்னைகள் ஒன்று இரண்டா? ஓராயிரம் என்றாலும் மிகையில்லை - படம் பிடிக்கும் போது ஏற்பட்ட பிரச்னைகளை – குறிப்பாகத் திரைக்கதை பற்றிய பிரச்னைகள் சிலவற்றை - இங்கு நினைவு கூர்பவர்கள்:

1. டைரக்டர் எஸ். பி. முத்துராமன்
2. எழுத்தாளர் பஞ்சு அருணாசலம்
3. ஒளிப்பதிவாளர் பாபு
4. உதவி இயக்குனர் லட்சுமி நாராயணன்.

இவர்கள் கூடியது பஞ்சு அருணாசலம் வீட்டில். ஒளிப்பதிவாளர் பாபு நேரே சமையலறைக்கே சென்று விட்டார். காரணம், திருமதி பஞ்சு அருணாசலம் போடும் காப்பி அவ்வளவு ருசியாக இருக்குமாம்! "காப்பி எல்லாருக்குமே வரும், வாருங்கள்" என்று அவரை இழுத்து வந்து மற்றவர்களுடன் உட்கார்த்தினோம்!

பஞ்சு: எல்லாப் படங்களிலும் பிரசினைகள் தோன்றும்தான். ஆனால் தலைப்பிலேயே கேள்விக் குறியுடன் ஆரம்பமானது புவனா ஒரு கேள்விக்குறி! அதன் முடிவு கடைசி வரை கேள்விக்குறியாகவே இருந்தது!

முத்துராமன்: கதைப்படி நாகராஜன் புவனாவை ஏமாற்றி அவளைத் தாய்மை அடையச் செய்து விடுகிறான். இதனை அறிந்த நாகராஜனின் நண்பன் சம்பத் அவளுக்கு வாழ்வு தருவதாக அவளைத் திருமணம் செய்து கொள்கிறான். ஆனால் புவனா அவன் செய்த தியாகத்தைத் தெய்வீகமாகக் கருதி அவனோடு வாழாமல் பிரிந்தே வாழ்கிறாள். கதையின் முடிவில் சம்பத்தும் புவனாவும் சேர்ந்து வாழ்வதாகக் காட்டி விடலாம் என்று முடிவு செய்து அதன்படி படமும் எடுத்தோம். படத்தைப் போட்டுப் பார்த்ததில் புவனாவின் புனிதமான கதாபாத்திரம் சேர்ந்து வாழ வைத்ததும் கெட்டு விட்டதாகத் தோன்றியதல்லவா!

பாபு: அதனால் எவ்வளவு வாதப்பிரதிவாதங்கள் ஏற்பட்டன! பலருக்கும் படத்தைப் போட்டுக் காண்பித்தோமில்லையா?

பஞ்சு: அதன் விளைவாக முடிவை என்ன செய்வது என்ற பிரச்னை அதிகரித்ததே தவிர குறையவில்லை. ஒருசாரார் அவள் எந்தத் தவறும் செய்யவில்லை. சேர்ந்து வாழ்வதே நியாயம் என்று வாதித்தார்கள். மற்றொரு சாரார் பிரிந்தே வாழ வேண்டும் என்று வாதிட்டார்கள். படத்தைப் பார்த்த எல்லாப்பெண்களுமே ஆச்சரியப்படத்தக்க அளவில் இருவரும் சேர்ந்தே வாழவேண்டுமென்று ஒருமுகமாகக் கூறினார்கள்.

லக்ஷ்மி நாராயணன்: படத்தின் முடிவு தெரிகிற வரையில் யூனிட்டில் யாருக்குமே தூக்கம் வந்திருக்காதே?

முத்துராமன்: தூக்கமா? கிட்டத்தட்ட கத்தி மேல் நடப்பது போல் அல்லவா சித்திரவதைப் பட்டுக் கொண்டிருந்தோம்! கடைசியில் ஏகமனதாக எல்லாரும் சேர்ந்து ஒரு முடிவு செய்தோம். அந்த முடிவு சம்பத் இறந்து புவனா வெள்ளை ஆடையுடன் நின்றால் தான் அந்தப் பாத்திரத்துக்குச் சிறப்பு என்பதுதான். உறவு கொண்டவனுடன் அவள் வாழவில்லை. உறவு கொள்ளாதவன் மரணத்துக்காக வெள்ளை ஆடை அணிந்து விதவையாய் நின்றாள்! மக்கள் பூரண வரவேற்பு கொடுத்தார்கள். என்ன இருந்தாலும் பாரம்பரியப் பண்பாடு வரவேற்பைப் பெறத்தான் செய்கிறது.

பாபு: பண்பாடு என்று சொல்லும் போது இப்பொழுது வரும் படங்களைப் பற்றித் தான் நினைக்கிறேன். அதுவும் குறிப்பாகப் புதிய அலை என்ற பெயரில்....

பஞ்சு: புதிய அலை என்று இப்பொழுது சொன்னால் ஏனோ முகத்தைச் சுளிக்கி

ருர்கள். ஆனால் புதிய அலை என்ற பெயரில் வரவில்லையே தவிர நமது ''மயங்குகிறாள் ஒரு மாது'' முன்னோடி தானே!

முத்துராமன்: சரியாகச் சொன்னீர்கள். ஆனால் இதிலும்தான் நமக்குப் பிரச்னைகள் தோன்றின!

பஞ்சு: நினைவிருக்கிறது. பருவ வயதில் உணர்ச்சிக்குப் பலியாகி நாம் என்ன செய்கிறோம் என்பதே தெரியாமல் செய்த தவறு அந்தப் பெண்ணின் வாழ்வில் கரும் புள்ளி. இந்தப் பெண்ணை ஒருவன் மணந்து கொள்கிறான். முடிவில் அந்தப் பெண்ணை அவனோடு வாழ வைப்பதா? வழக்கம் போல் சாக அடிப்பதா?

முத்துராமன்: கதையை முதன் முதலாகக் கேட்ட நாளிலிருந்தே, இந்தப் பிரச்னை தான் அலைக்கழித்தது. நானும் நீங்களும் யார் என்ன சொன்னாலும் அந்தப் பெண் செய்த அறியாத தவறை மன்னித்து அந்தப் பெண்ணை வாழ வைப்பது தான் முறை என்ற முடிவுக்கு வந்தோமில்லையா?

லக்ஷ்மி நாராயணன்: ஆனால் இந்த முடிவை மாற்றப் பலர் பகீரதப் பிரயத்தனம் செய்தார்கள்.

பாபு: ஏன் விநியோகஸ்தர்கள் கூட அந்தப் பெண்ணை சாகடியுங்கள். படத்தைவாங்கிக் கொள்கிறோம் என்று சொல்லவில்லையா?

பஞ்சு: ஆனால் நாங்கள் தான் பணியவில்லையே! நண்பர்கள் விநியோகஸ்தர்களின் பலத்த எதிர்ப்புக்கு இடையில் படத்தை எங்கள் முடிவுப்படியே வெளியிட்டோம். வெற்றியும் கண்டோம். படம் வெற்றியடைந்த பிறகு பல விநியோகஸ்தர்கள் நம் முடிவை ஒப்புக் கொண்டார்கள் இல்லையா?

முத்துராமன்: பாபு! படப்பிடிப்பில் பிரச்னை எழுவது இயற்கை. ஆனால் இயற்கையே பிரச்னையாவது ஒளிப்பதிவாளருக்குத் தான் இல்லையா!

பாபு: காற்றினிலே வரும் கீதம் படப்பிடிப்பின் போது ரொம்ப கஷ்டப்பட்டுப் போனேன். ஒருநாள் சூரியனையே காண முடியவில்லை. நட்சத்திரங்கள் உட்பட எல்லோருமே வந்து விட்டார்கள். படப்பிடிப்பை ரத்து செய்ய முடியாத சிக்கல். போதாக்குறைக்கு மெர்க்காராவில் இந்த வெளிப்புறப் படப்பிடிப்பு நடந்ததனால் ஆங்காங்கே திட்டுத் திட்டாக வெண் மேகப் புகைமண்டலம். பாடல் காட்சியைச் சிறிது மாற்றி, கதாநாயகி புகை மண்டலத்தில் மறைவதாக அமைத்தோம்! அப்பொழுதுகூட நீங்கள் இந்தப் புகைமண்டலத்தில் எடுக்கிறோமே பாபு, ஓரளவாவது பதிவாகுமா? என்றீர்கள், நினைவிருக்கா?

முத்துராமன்: பேஷாக நினைவிருக்கிறது. என் கேள்விக்குப் பதில் கூறும் முகமாக நன்றாக எடுக்க முடியும் என்று உறுதியாகச் சொல்லிச் சிறப்பாக எடுத்தும் காட்டினீர்களே; அதுவும் நினைவிருக்கிறது.

பஞ்சு: 'காற்றினிலே வரும் கீதம்' படத்தைப் பொறுத்தவரை மிகப் பெரிய பிரச்னை நாம் எதிர்பார்த்த அளவு அது ஓடவில்லை என்பதுதான்!

முத்துராமன்: அதற்குக் காரணம் கதையை ரசிகர்கள் சரிவர ஏற்றுக் கொள்ளவில்லை என்பதுதான். உலகத்தில் மூன்று பேர் ஒரே உருவ அமைப்பில் இருப்பார்கள் என்ற அடிப்படையில் கவிதாவை மூன்று மாறுபட்ட வேடங்களில் காட்டினோம். இதை ரசிகர்களால் ஜீரணிக்க முடியவில்லை.

லக்ஷ்மி நாராயணன்: இளைய ராஜாவின் இன்னிசை, பாபுவின் சிறப்பான ஒளிப்பதிவு, அழகான வெளிப்புறக் காட்சிகள்.

முத்துராமன்: இவ்வளவு இருந்தும் எதிர்பார்த்த அளவு படம் வெற்றி பெறவில்லை. கதை அம்சம் எவ்வளவு முக்கியம் என்பது தெரிகிறதல்லவா? அது சரியாக அமையாத போது மற்ற எல்லா சிறப்புக்களும் அடிபட்டுப் போகின்றன.

(இப்படி இயக்குனர் முத்துராமன் கூறியதும் மற்ற அனைவரும் ஒருசேர, ஆமாம் என்பது போல் தலையாட்டி விட்டு திருமதி பஞ்சு அருணாசலம் கொண்டு வந்த டிபன் காப்பியைக் கவனிக்கத்தொடங்கினார்கள்!)

உரையாடல் தொகுப்பு: **''சலன்''**

புகைப்படங்கள்: **பார்த்தி**

✖ பஞ்சு அருணாசலம் ✖ பாபு



✖ லக்ஷ்மி நாராயணன் ✖ எஸ். பி. முத்துராமன்







# வீட்டுக் கைதிகள்

What lips my lips have kissed, and where and why
I have frogotten and what arms have lain
Under my head till morning, but the rain
Is full of Ghosts tonight, that tap and sigh
Upon the glass and listen for reply

— Edna St Vincent Millay 1892—1950.

**1**

**ரா**ஜீவ் குமார் கை கால்களை நீட்டிக் கொண்டபடி, விசாலமான படுக்கையில், மிருதுவான மெத்தையின் மீது ஆழ்ந்த நித்திரையில் இருந்தான்.



**ஜெயலலிதா**

அரண்மனை போன்ற அவனது மாளிகையின் முக்கிய படுக்கை அறையின் பெரும் பகுதியை இந்தப் படுக்கையே ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது.

ஏ. ஸி யின் இதம், பட்டு படுக்கை விரிப்புகளின் மென்மை, சுகமான தூக்கம், இந்த இன்ப நிலையைக் கலைத்து, திடீரென்று படுக்கைப் பக்கத்தில் உள்ள மேஜையின் மீதிருந்த வீட்டுத் தொலைபேசி மணி அடித்தது.

திடுக்கிட்டு ராஜீவ் குமார் விழித்துக்கொண்டான். மணி ஓயாமல் அடித்துக்கொண்டே இருந்தது. சட்டென்று இண்டர்காம் பொத்தானை அழுத்தி, எரிச்சலூட்டும் அந்த சப்தத்தை நிறுத்தி ராஜீவ் ரிசீவரைத் தனது காதோடு இணைத்துக் கொண்டான். ''குட் மார்னிங் சார்! மணி ஆறாயிடுச்சு.'' பேசியவன் சுரேஷ். ராஜீவுக்கு செக்ரட்டரி, சிக்கல்களைத் தீர்ப்பவன், பொது மேற்பார்வையாளன் — சகலமும் சுரேஷ்தான். ராஜீவுக்கு அவன்தான் வலது கை மாதிரி. அவன் வீட்டிலேயே வசித்து வந்தான்.

''குட் மார்னிங்'' என்றான் ராஜீவ், கொஞ்சம் சலிப்புடன்.

''இன்னிக்கு ஏழு மணி கால்ஷீட் சார்! ஏழரை மணிக்கு நீங்க செட்டிலே இருக்கணும்'' என்று சுரேஷ் ஞாபகப்படுத்தினான்.






''ஓ.... காட்.....!'' ராஜீவ் ஒரு முனகல் சத்தத்தை எழுப்பினான். தலைவலி மண்டையைப் பிளந்துவிடும்போல் இருந்தது. ''சுரேஷ், ஸ்டுடியோவுக்கு போன் பண்ணி ஒன்பது மணிக்கு முன்னாலே என்னை எதிர்பார்க்க வேண்டாம் என்று சொல்லிவிடு.''

''இப்பவே சொல்லிடறேன் சார்.''

ராஜீவ் இன்டர்காமின் வேறொரு பித்தானை அழுத்தினான். சமையற்கட்டில் மணி அடித்தவுடன் சமையற்காரன் கேசவன் அங்கே போனை எடுத்தான்.

''ஐயா!''

''காப்பி கொஞ்சம் ஸ்ட்ராங்கா இருக்கட்டும்.''

''இதோ அனுப்புறேங்க ஐயா.''

ராஜீவ் போனைக் கீழே வைத்தான். படுக்கையில் புரண்டு திரும்பினான். அப்பொழுதுதான் எட்டடி சதுர வடிவில் இருந்த பெரிய படுக்கையின் மறுபுறத்தில், ஓரமாகப் படுத்து உறங்கிக் கொண்டிருந்த பெண்ணைக் கவனித்தான். ராஜீவின் கருத்த புருவங்கள் கோபத்தில் சுருங்கின. தனக்குத்தானே ராஜீவ் சில சட்ட திட்டங்களை வகுத்துக் கொண்டிருந்தான். அவற்றின்படி, இது தனது விதிமுறைக்குப் புறம்பான செயல்.

இரவில் ராஜீவ் தனது படுக்கை அறைக்கு எந்தப் பெண்ணை அழைத்து வந்தாலும் அவள் இரவு முழுவதும் அங்கேயே தங்கி விடக் கூடாது என்பது ராஜீவின் உத்தரவு, எழுதப் படாத கட்டளை. அழைத்து வந்த பெண்ணைப் பூரணமாக



ஏ. பி. நாகராஜன்
நவராத்திரி



முரசொலிமாறன்
குலதெய்வம்

அனுபவித்து, திகட்டிப்போன நிலை ஏற்பட்டு ராஜீவ் தூங்கிவிட்ட பிறகு அவள் எழுந்து, ஆடைகளை உடுத்திக் கொண்டு, நிசப்தமாக, ராஜீவுடைய அமைதியான உறக்கத்தைக் கலைக்காமல் போய்விட வேண்டும். இமே, வீட்டின் முன் நுழைவாசலுக்குப் போகாமல், அவள் ஒரு பக்கத்து வராந்தா வழியாகப் போக வேண்டும். அங்கே அவளுக்காக டிரைவரோடு ஒரு கார் தயாராக நிற்கும். அவளை வீடு கொண்டு போய்ச் சேர்த்துவிட. எந்தப் பெண்ணுமே இரவு முழுவதும் ராஜீவுடன் இருக்கக் கூடாது. இதுதான் அவனுடைய வழக்கம்.

தன்னுடன் தொடர்பு கொண்ட எல்லாப் பெண்களுக்குமே இது நன்றாகத் தெரிந்த விஷயம். இவளுக்கும் தெரியும். பின்பு ஏன் விடியும்வரை இங்கேயே தங்கி விட்டாள்? ஒருவேளை வேண்டுமென்றே திட்டமிட்டு இப்படிச் செய்திருப்பாளோ என்ற சந்தேகம் ராஜீவ் மனத்தில் தோன்றியது. இப்படிச் செய்வதன் மூலமாக ராஜீவுடைய சாசுவதமில்லாத அன்பில், நிரந்தரமான இடத்தைப் பிடிக்க அவள் ஆசைப்படுவதைச் சூசகமாகத் தெரிவிக்கிறாளா?

ராஜீவ் தனக்குள் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டான். தன்னுடன் ஏற்பட்ட தற்காலிகமான உறவை நிரந்தரமானதாக ஆக்கிக்கொள்ள இந்த தாரா... மீரா... ரீட்டா சே! —இவள் பெயரே ஞாபகத்துக்கு வரவில்லையே! நினைத்தால், கடைசியில் அவளுக்குப் பெருத்த ஏமாற்றம்தான் மிஞ்சும்.

ராஜீவ் தனது வாழ்க்கையில் அனுபவித்த பெண்களின் எண்ணிக்கையே மறந்துவிட்டிருந்தான். எத்தனையோ பேர் வந்து போய் விட்டார்கள். யார் எண்ணுவது? அவர்களில் எந்தப் பெண்ணுக்குமே, நான்கு ஐந்து வாரங்களுக்கு மேல் தனது வாழ்க்கையில் அவன் இடம் அளித்ததும் கிடையாது. அதற்கு மேல் எந்தப் பெண்ணையும் தன்னுடன் இருக்க அனுமதிப்பதாகவும் ராஜீவுக்கு உத்தேசம் இல்லை.

இந்த வாழ்க்கை முறையே அவனுக்குப் பிடித்திருந்தது. சௌகரியமாக இருந்தது. எந்த விதமான பந்தங்களும் இல்லை, கட்டுப்பாடுகளும் இல்லை. உறவு என்னும் பெயரால் எந்த விலங்குகளையும் மாட்டிக் கொள்ள அவனுக்கு விருப்பம் இல்லை. சுதந்திரப் பறவையாக வாழ்ந்து வந்தான்.

ராஜீவைச் சுற்றிச் சுற்றி வட்டமிடும் இளம் பெண்களுக்கும் பஞ்சம் இல்லை. ஏன் அவனைத் தேன் ஜாடியைச் சுற்றி ஈக்கள் மொய்ப்பது போல் சூழ்ந்து கொள்ள மாட்டார்கள்? ராஜீவ் குமார்தான் தமிழ்த் திரைப்பட உலகின் நம்பர் ஒன் சூப்பர் ஸ்டார் ஆயிற்றே! மற்ற எல்லாத் தென்னிந்திய நடிகர்களையும் விட அதிகப் பணம், அதிக டிமாண்ட், அதிக செல்வாக்கு — எல்லாம் ராஜீவுக்கே. புகழேணியின் உச்சியில் தனது ஸ்தானத்தையும் அந்தஸ்தையும் பதினைந்து ஆண்டுகளாக விட்டுக் கொடுக்காமல் காப்பாற்றி வந்திருந்தான். எத்தனையோ புதிய நடிகர்கள் சமீப காலத்தில் தமிழ்த் திரையுலகில் புகுந்திருந்தாலும், ராஜீவ்குமாரை யாராலும் அசைக்க முடியவில்லை. அவனிடத்தை எவராலும் பிடிக்க முடியவில்லை. கிட்டக் கூட நெருங்க முடியவில்லை என்றால் மிகையாகாது.

தமிழ்த் திரையுலகில் தனிக்காட்டு ராஜாவாக, கோடிக்கணக்கான ரசிகர்களால் பூஜிக்கப்பட்டு வந்தான். ராஜீவிடம் யாரையும் கவர்ந்து, வசீகரித்து, தனக்கு அடிமையாக்கிக் கொள்ளக்கூடிய பிரத்தியேகமான சிறப்பியல்பும் இருந்தது. மறைந்த ஜான் கென்னடி, ஜவாஹர்லால் நேரு போன்ற பெரிய அரசியல் தலைவர்களிடம் காணப்பட்ட மக்களை ஈர்க்கும் தனிப்பட்ட காரிஸ்மா, ராஜீவிடம் பெருமளவில் இருந்தது.

தான் விரும்பிய பெண்ணை அடைய இதுவரை ராஜீவ் தவறியதே இல்லை. அவனுடன் உறவு கொள்ளும் பெரும்பாலான பெண்களுக்குத் தாங்கள் எவ்வளவு தூரம் போகலாம்; தங்களுடைய எல்லை எதுவரை என்பது நன்றாகப் புரியும். ராஜீவுடன் சிநேகம் என்றால் அது ரொம்பக் காலம் நீடிக்காது என்பதை உணர்ந்து, காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ள அப்பெண்கள் மனத்தைப் பக்குவப்படுத்திக் கொண்டு, நாடப்பட்ட அதே வேகத்துடன் தூக்கி எறியப்படுவோம் என்று அறிந்து, அதற்குத் தயாராகவே இருந்தார்கள். ஒரு பெண்ணிடம் ராஜீவுக்குச் சலிப்புத் தட்டிவிட அவளுக்கு விடை கொடுக்க வேண்டிய நேரம் வரும்பொழுது அவளுக்கு ஒரு ஜதை வைரத் தோடுகளையோ, வைர வளையல்களையோ தந்து வழியனுப்புவது ராஜீவுடைய வழக்கம். பொதுவாக அப்பெண்களைச் சமாதானப்படுத்த, தூக்கி எறியப்படுவதால் உண்டாகும் வருத்தத்தை ஓரளவு போக்க அதுவே போதுமானதாக இருக்கும்.

---



"பொருத்தமற்ற காட்சி"

## பூட்டாத பூட்டுக்கள்!

"ஆண்டிப்பட்டி மாரியப்பன்" பாடல் காட்சி, படத்துக்குப் பொருத்தமற்று இருக்கிறது. இது தேவைதானா?

சென்னை-81 — கே. எம். சுப்ரமணி

கடவுள் சத்தியமாகத் தேவையில்லை. பொருத்தமற்றதுதான். சந்தேகமில்லை.

—மகேந்திரன்

கிடைத்தவரை லாபம் என்று நினைத்துக் கொண்டு அவள் போய் விடுவாள்.

சில சமயங்களில் யாராவது ஒரு பெண் வாயை மூடிக் கொண்டு போகாமல் ஏதாவது உபத்திரவம் செய்தால் அவளைக் கழற்றி விடும் பொறுப்பினை சுரேஷிடம் ஒப்படைத்து விட்டால் பிரச்னை தீர்ந்து விடும். ராஜீவ் விவரங்களைக் கேட்டறிய மாட்டான். அதைப் பற்றிக் கவலையும் பட மாட்டான். தொந்தரவு கொடுக்கும் பெண்களைச் சரிக்கட்டிச் சமாளிக்க சுரேஷ் என்ன வழிமுறைகளை, என்ன தந்திரங்களைக் கையாண்டான் என்பதை யெல்லாம் ராஜீவ் தெரிந்துகொள்ள விரும்ப மாட்டான். தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை என்று கருதினான். ராஜீவைப் பொறுத்த வரையில் அவனுக்குத் தெரிந்ததெல்லாம் இவ்வளவு தான்: ''இந்தப் பெண்ணு தகராறு பண்றா இவளைக் கவனிச்சுக்கோ'' என்று சுரேஷிடம் ஒரு முறை சொல்லி விட்டால் போதும். மறுபடியும் அந்தப் பெண் ராஜீவின் வம்புக்கே வராதபடி, மறுபடியும் அவளைப் பற்றி ராஜீவ் எதுவுமே கேள்விப்படாதபடி சுரேஷ் அவளை அவ்வளவு பக்குவமாகக் கவனித்து விடுவான்.

வரவேற்பு காலத்தை மீறி, வேண்டாத விருந்தாளியாகப் படுக்கையில் படுத்திருந்த அழகியின் பின்னழகின்மீது ராஜீவ் ஓங்கி ஒரு அறை கொடுத்தான்.

''ஆ.....!''. திகைப்புடன் திடுக்கிட்டு அந்தப் பெண் விழித்துக் கொண்டாள். ''நிஜமாகவே வலிக்கிறது. இவ்வளவு பலமா அடிக்கணுமா?'' அடிபட்ட இடத்தைத் தனது கையால் தேய்த்துக் கொண்டே சிணுங்கினாள் அவள்.

ராஜீவ் பதில் எதுவும் சொல்லாமல் அவள் பக்கம் தனது பார்வையைக் கூடத் திருப்பாமல் கட்டிலை விட்டு இறங்கினான். தரை முழுவதும் விரிக்கப்பட்டிருந்த தடிப்பான, மிருதுவான கார்பெட் மீது நடந்து பாத்ரூமை நோக்கிச் சென்றான். பாத்ரூம் கதவைத் திறந்து, கதவு பிடியின் மீது ஒரு கையை வைத்து, ஒரே ஒரு கணம் திரும்பி அவளைப் பார்த்தான். இன்னொரு கையின் கட்டை விரலால் வார்த்தைக்குத் தக்கபடி சைகை செய்து, ''கெட் அவுட்'' என்றான், ரத்தினச் சுருக்கமாக.

''ராஜீவ்.....!''

''ஐ ஸெட் கெட் அவுட்!''

''ப்ளீஸ் ராஜீவ், டோன்ட் பீ ஸோ மீன்.....'' என்று ஆரம்பித்தாள், மறுபடியும் அதே சிணுங்குகின்ற குரலில்.

ராஜீவ் அவளை மேலும் பேச விடவில்லை. ''என்னைப் பத்தி உனக்குத் தெரியும் இல்லே?


எஸ். டி. சுந்தரம்
மனிதனும் மிருகமும்


பி. ஆர். பந்துலு
எங்கள் குடும்பம் பெரிசு

அஞ்சே நிமிஷம். அவ்வளவுதான் உனக்கு டைம் கொடுப்பேன். நான் பாத்ரூமிலிருந்து வெளியே வரும்போது மறுபடியும் உன்னை இங்கே பார்க்கக் கூடாது.! அண்டர்ஸ்டாண்ட்? நௌ ஸ்க்ராம்!'' அத்தோடு பாத்ரூம் உள்ளே மறைந்து கதவைத் தனக்குப் பின்னால் ஓங்கி அடித்து மூடிக் கொண்டான்.

மூடிய கதவைப் பார்த்து, அவள் முகத்தை நெளித்து அழகு காட்டினாள். அவள் உலகத்தை நன்றாகப் புரிந்து கொண்டவள். ராஜீவுக்குத் தன்மீதிருந்த மோகம் தீர்ந்து விட்டதன் அறிகுறிகள் தெரிவதாக அவளுக்குத் தோன்றியது. ''ஹாம்! இங்கே இவ்வளவுதான் போலிருக்கு. எல்லாம் முடிஞ்சு போச்சு. பரவாயில்லே! அப்படி ஒண்ணும் நான் ஏமாந்து போயிடலே. ஒரு வைர நெக்லஸ். ஒரு புது ஃபியட் கார். இரண்டையும் சாமர்த்தியமாக் கரந்துட்டேன். நாட் பேட் அட் ஆல்!''

ராஜீவைப் பற்றி அவளுக்கு நன்றாகத் தெரியும். அவனுடைய கவர்ச்சி வலையில் எத்தனை இளம் பெண் மான்கள் வழி தவறி சிக்கி விட்டன என்பதும் அவளுக்குத் தெரியும். மற்றவர்கள் எல்லாம் நாலைந்து வாரங்களோடு சரி. இவள் எப்படியோ பத்து வாரங்கள் வரை விடாப் பிடியாக ஒட்டிக் கொண்டு ஒரு புதிய சாதனையை ஏற்படுத்தி இருந்தாள். இதுவே அவளுடைய தனி அதிர்ஷ்டம் என்பதையும் உணர்ந்தாள்.

''எப்படியோ பத்து வாரங்கள் வரை வெற்றிகரமாகப் பற்றிக் கொண்டு இருந்து விட்டேனே! அப்படியானால் என் மீது அவருக்குக் கொஞ்சம் ஸ்டெடியான ஆசை இருக்கும் என்றுதானே அர்த்தம்? இல்லையென்றால், இந்நேரம் இன்னொருத்தியைப் பிடித்துக் கொண்டிருக்க மாட்டாரா? ஆனால் ராத்திரி பூராவும் இங்கேயே தூங்கிவிட்டேன் என்று இப்படிக் கோபப்படுகிறாரே! இரவு தங்கியதால் நானே காரியத்தைக் கெடுத்து விட்டேனோ? ஒருவேளை நான் அப்படிச் செய்யவில்லை என்றால், உறவு இன்னும் சில நாட்கள் நீடித்திருக்குமோ

''பொருத்தமற்ற காட்சி''

## மழலைப் பட்டாளம்

நடிகையாக இருந்த தாங்கள் மழலைப் பட்டாளத்தில் டைரக்‌ஷன் பொறுப்பேற்ற போது ஒருவித அச்சம் தெரிந்ததா?... டைரக்ட் பண்ணும் போது.

உளுந்தூர் பேட்டை. எஸ். காசிமணி

அன்புச் சகோதரரே! நீங்கள் ஏதாவது பத்திரிகைக்காக என்னைப் பேட்டி காண்கிறீர்களா? இல்லை படத்தில் உள்ள குறை நிறைகளைப் பற்றிக் கேள்வி கேட்கிறீர்களா? எனக்குச் சிறிது குழப்பமாயிருக்கிறது. —லக்ஷ்மி



ஜாவர் சீதாராமன்
ஏழை படும் பாடு

கவிஞர் கண்ணதாசன்
மாலையிட்ட மங்கை

என்னவோ? அவர் வெளியே வரும்வரை இருந்து பார்க்கலாமா? கொஞ்சம் தாஜா பண்ணி அவர் மனத்தை இரங்க வைக்க முடியுமா என்று பார்த்தால் என்ன?'' — ஒரு நிமிடம் யோசித்தாள். பிறகு, விஷப் பரீட்சை வேண்டாமென்ற முடிவுக்கு வந்தாள். ராஜீவுக்கு ஆத்திரம் வந்தால் எப்படி இருக்கும் என்பதை முன்பே சில சந்தர்ப்பங்களில் பார்த்திருந்தாள். அப்போது, அவனுடைய கோபத்துக்கு ஆளான துரதிருஷ்டசாலிகள் வேறு யாரோ. அவனுடைய பயங்கரக் கோபத்துக்கு இப்போது அவள் பாத்திரமாக விரும்பவில்லை. அதைச் சமாளிக்கப் போதுமான தைரியமும் அவளுக்கு இல்லை. அவசரமாகத் தனது ஆடைகளை மாற்றிக் கொண்டு வெளியேறிவிட்டாள்.

ராஜீவ் மீண்டும் அறைக்குள்ளே நுழையும்போது, அந்தப் பெண்ணைக் காணவில்லை. ''அப்பாடா! பிழைத்தேன்'' என்பது போல் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். அதிகாலையில் எழுந்தவுடன் முதலைக் கண்ணீரையும், சோகம் மிகுந்த பார்வையையும், ''அய்யோ! நாதா! உங்களையே நம்பியிருந்தேனே! என்னை ஏமாற்றிவிடாதீர்கள்! என்னைக் கைவிட்டு விடாதீர்கள்'' என்றெல்லாம் நாடக பாணி வசனங்களையும் எங்கே சந்திக்க வேண்டியிருக்குமோ என்று பயந்து கொண்டே குளியல் அறையை விட்டு வெளியே வந்த அவனுக்கு அந்தப் பெண் (இன்னும் அவள் பெயர் ஞாபகத்துக்கு வரவில்லை) தொந்தரவு கொடுக்காமல் போய்விட்டது பெரிய பளுவை இறக்கி விட்ட மாதிரி ஓர் உணர்வை ஏற்படுத்தியது. வழக்கம் போல் இனிக்கும் வார்த்தைகளைப் பேசி அவளைச் சமாதானப்படுத்தி அனுப்பும் அளவுக்கு இன்றைக்கு அவனுக்குப் பொறுமை இல்லை. தலைவலி பிராணனையே வாங்கிவிடும் போலிருந்தது. தொண தொணவென்று அவள் ஏதாவது வாதாடிப் பேசியிருந்தால், முதலில் கைக்கு எட்டிய பொருளைத் தூக்கி அவள் மீது வீசி எறிந்திருப்பான்.

காப்பியும் காலை தினசரிகளும் தயாராக மேஜையின் மேல் வைக்கப்பட்டிருந்தன. மெதுவாகக் காப்பியை உறிஞ்சிக் கொண்டே ராஜீவ் மடமடவென்று முக்கிய தலைப்புச் செய்திகளைப் படித்தான்.

பல விஷயங்களில் திரை உலகில் ராஜீவ் ஒரு வித்தியாசமான மனிதனாக இருந்தான். மற்ற எத்தனையோ நடிகர்களைப் போல் இல்லாமல், ராஜீவ் பெரிய படிப்புப் படித்தவன், எம். பி. ஏ. பட்டம் வாங்கியவன். அறிவு சம்பந்தமான விஷயங்களில் அதிக ஈடுபாடு உள்ளவன். உலகத்தில் என்ன நடக்கிறது, உலக அரசியலில் புதிதாக என்ன திருப்பங்கள் ஏற்பட்டிருக்கின்றன, எல்லாவற்றையும் தெரிந்து கொள்வதில் ஆர்வம் அதிகமுள்ளவன். அதே சமயத்தில் சிற்றின்பங்களிலும், சுக போகங்களிலும் அதிக சபலம் உள்ளவன்.

ராஜீவ் பல முரண்பாடான குணாதிசயங்களைக் கொண்டவன். சொந்த இன்பங்களுக்காகவும், ஆசை நாயகிகளுக்காகவும் பணத்தைத் தண்ணீர் போல இறைப்பான். அதே நேரத்தில், அதே தாராள அளவில் எத்தனை எத்தனையோ நல்ல காரியங்களுக்கும், அனாதை விடுதிகளுக்கும், பள்ளிக்கூடங்களுக்கும், மருத்துவ மனைகளுக்கும் வாரி வழங்கித் தான தர்மம் செய்வான்.

அவனுக்கு மனைவி, மக்கள், குடும்பம் என்று யாரும் கிடையாது. மனம் போன போக்கில் தினமும் ஒரு புதிய மலரை நாடுவான். கசக்கிப் பிழிவான். மறு நாள் வேறொன்றைத் தேடுவான். அப்படி இருந்தும் தனக்குக் கீழ் வேலை செய்பவர்கள் மட்டும் நடத்தையில் மிகவும் கண்ணியமானவர்களாகவே இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பான். அப்படிப்பட்டவர்களைத்தான் தன்னிடம் வேலைக்குச் சேர்த்துக் கொள்வான்.

ராஜீவ் வெறும் நடிகன் மட்டுமல்ல. அவன் திரைப்படம் விநியோகம் செய்யும் ஒரு கம்பெனிக்கு முதலாளி, பழங்களை டப்பாக்களில் அடைக்கும் தொழிற்சாலை ஒன்றுக்கு உரிமையாளன்; ரசாயனப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஒன்றுக்கும் சொந்தக்காரன். இத்துடன் பல முக்கிய தொழில் நிறுவனங்களில் பிரதம பங்குதாரனாகவும் இருந்தான். ஒரு படத்

''பொருத்தமற்ற காட்சி''

## அவன் அவள் அது

ஒரு படித்த பெண்ணாயிருந்தும் லக்ஷ்மி ஊசி மூலம் குழந்தை பெறும் விஷயத்தைப் பச்சையாக ஒரு பால்காரியிடமா கேட்டுத் தெரிந்து கொள்வது?

திருச்சி சங்கம் அருணகிரி

படிக்காத பாமர மக்களுக்குப் புரிய வைக்கத்தான் செயற்கை முறையில் குழந்தை பெறும் முறையை மாடு குட்டி போடுவதோடு ஒப்பிட்டுக் காட்சி அமைத்தோம். அவளைப் பால்காரனாகக் காட்டாமல் பால்காரியாகக் காட்டியிருக்கலாம் என்பது இப்போதுதான் என் மண்டைக்குப் புரிகிறது. சாஷ்டாங்கமாகக் காலில் விழுகிறேன். வயதிலும் அறிவிலும் சிறியவன். மன்னிக்கக் கூடாதா?

—விச

துக்கு ராஜீவ் வாங்கும்தொகை ஏழு லட்சம். இதுவரை எந்தத் தமிழ் நடிகனும் அந்தத் தொகையை எட்டியிருக்கவில்லை. வருஷத்துக்குக் குறைந்தபட்சம் பத்துப் படங்களையாவது முடிப்பான். நடிப்புத் தொழில் மூலம் மட்டும் ராஜீவுக்கு ஆண்டுக்கு எழுபது லட்சம் ரூபாய்க்குக் குறையாமல் வருமானம் கிடைக்கும். விநியோகக் கம்பெனி, தொழிற்சாலைகள், மூலம் அதைவிட அதிகமான வருமானம் வந்துகொண்டிருந்தது. சுருக்கமாகச் சொல்லப் போனால் பணம் ராஜீவுக்கு ஒரு பிரச்னையாக இருக்கவில்லை. தனது ஆசை நாயகிகளிடத்தில் இதயமே இல்லாதவன் போல் நடந்து கொள்வான். அதே சமயத்தில் தனது வீட்டில் வேலை பார்க்கும் வேலைக்காரர்களிடத்திலும், தனது தொழிற்சாலைகளில் உழைக்கும் ஊழியர்களிடத்திலும் ஒரு கருணை மூர்த்தியைப் போல, உண்மையான பாசத்துடன், அக்கறை மிக்க தகப்பனைப் போல் நடந்து கொள்வான். வியக்கத்தக்க முரண்பாடுகள் கொண்ட சுபாவம் படைத்தவன் தான் ராஜீவ்.



நெஞ்சிலன் பதுக
தெய்வப்பிறவி

பீம்சிங்
பாவமன்னிப்பு

தினசரிகளை ஒரு பக்கம் போட்டுவிட்டு, எழுந்து நிலைக்கண்ணாடியின் முன்னால் போய் நின்றான். படுக்கை அறையின் ஒரு முழுச் சுவரை, மேலிருந்து தரைவரை, அந்தக் கண்ணாடியே சுவாதீனப்படுத்திக் கொண்டிருந்தது.

ராஜீவுக்கு வயது 45. ஆனால், அந்த விவரம் தெரியாதவர்கள் அவனைப் பார்த்தால், அவனுக்கு முப்பது வயதுக்கு மேல் ஒரு நாள் கூட ஆகியிருக்கும் என்று நம்ப மாட்டார்கள். அந்த அளவுக்கு முகத்தையும், உடம்பையும் கச்சிதமாகப் பாதுகாத்து வைத்திருந்தான். உணவில் கட்டுப்பாடு, கடுமையான தேகப்பயிற்சி — இந்த வழக்கங்களைத் தவறாமல் பின்பற்றி வந்திருந்தான்.

கண்ணாடி பிரதிபலித்த அழகிய முகத்தில் ஒரு சுருக்கம்கூட இல்லை. கண்ணுக்கு அடியில் மட்டும், லேசாகக் குழி விழுந்தாற் போல் தெரிந்தது. கடந்த இரவின் மிகையான அலட்டலின் விளைவு. ''டேய் ராஜீவ், ஜாக்கிரதை! இந்த முகம் இப்படியே இருக்கணும்னு. இன்னும் ஒரு வாரத்துக்காவது எந்தப் பெண்ணைப் பத்தியும் நினைக்கக்கூடப் பார்க்காதே!'' என்று தன்னைத் தானே எச்சரிக்கை செய்துகொண்டான்.

தனது உருவத்தைக் கண்ணாடியில் ஏற இறங்கப் பார்த்துக் கொண்டான். ஆறடி உயரம், உயரத்துக்கு ஏற்ற உடல் அமைப்பு; வாட்டசாட்டமான தோள்கள்; நீரலைகளைப் போல் உருளும் பைசெப்ஸ்; அகன்ற மார்பு நிறைய சுருட்டையான கருத்த முடி; இஸ்திரி செய்தது போல் சப்பையான வயிறு; தேக்கு மரங்கள் போன்ற கெட்டியான தொடைகளும், கால்களும்.

''தலைவலி தாங்க முடியவில்லையே! இன்னிக்கு எக்ஸர்சைஸ் பண்ணலாமா விட்டு விடலாமா?'' என்று ஒரு விநாடி யோசித்தான். பின்பு விட வேண்டாம், செய்தே முடித்து விடலாம் என்று நினைத்தான்.

குனிந்து ஒன் — டு — த்ரீ — ஃபோர்! ஒன் — டூ — த்ரீ — ஃபோர்! என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்டே கசரத்து செய்ய ஆரம்பித்தான். நாற்பதாவது பஸ்கி எடுத்து முடிப்பதற்குள் மூடப் படாத அவனது முதுகும் தோள்களும் வியர்வையால் பளபளத்தன. டர்கிஷ் டவல் ஒன்றினால் வியர்வையைத் துடைத்துக் கொண்டு, பதினைந்து நிமிஷங்களுக்கு வியர்வை நிற்கும்வரை காத்திருந்து, பின்பு குளிக்கச் சென்றான்.

குளித்த பிறகு இடுப்பைச் சுற்றி நீல நிறப் பட்டு லுங்கியைக் கட்டிக்கொண்டான். தோள்களைச் சுற்றி ஒரு பெரிய பாத் டவலைப் போர்த்திக் கொண்டு வீட்டிலேயே கட்டப்பட்டிருந்த தனி மேக்-அப் அறைக்குச் சென்றான்.

அந்த மேக்-அப் அறை விசேஷமான முறையில் அமைக்கப்பட்டிருந்தது. டிரெஸ்ஸிங் டேபிள் கண்ணாடியின் மேற்புறம் அதிக வெளிச்சம் தரக் கூடிய பல்புகள் பொருத்தப்பட்டு இருந்தன. அறையின் சுவர்களுக்குள்ளேயே பில்ட் இன் வார்ட்ரோப்கள் அமைக்கப்பட்டிருந்தன- தன்னுடைய பல்வேறு படங்களின் உடைகளை வைப்பதற்காக. புத்தி நுட்பமுள்ள முறையில் அறையில் ஆங்காங்கே பல முழு நீள நிலைக்கண்ணாடிகள் மாட்டப்பட்டிருந்தன- எந்தக் கோணத்திலிருந்து வேண்டுமானாலும் ராஜீவ் தன்னைப் பார்த்துக் கொள்ள வசதியாக.

---

''பொருத்தமற்ற காட்சி''

## நூட்டாத பூட்டுக்கள்!

இப்படத்தின் கதாநாயகி கடற்கரையில் தண்ணீர் குடத்துடன் வந்து அமர்வது அவசியம் தானா?

நாகர்கோவில் — ப. சண்முகமணி

தண்ணீர்க் குடத்துடன் கடற்கரைக்கு வருவது தண்ணீர் எடுத்துச் செல்லவா? இல்லையே! அவள் எதற்காக அங்கே போகிறாள் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே....

—மகேந்திரன்





சோ
யாருக்கும் வெட்கமில்லே!



கே. பாலசந்தர்
அரங்கேற்றம்

ராஜீவுடைய மேக்-அப் நிபுணன் மாணிக்கம் தயாராக இருந்தான். ராஜீவ் அதிக மேக்-அப் போட மாட்டான். கொஞ்சம் பேன் - கேக் அவ்வளவுதான். பத்தே நிமிடங்களில் மேக்-அப் முடிந்து விட்டது. மாணிக்கம் ஒரு விக்கை எடுத்து ராஜீவுக்குக் காண்பித்தான். ''விக்கா? இது எதுக்கு?'' என்று ராஜீவ் ஆச்சரியத்துடன் கேட்டான்.

''ஒரு சேஞ்ச் இருக்கட்டுமென்னு நினைச்சேன் சார்.'' தமிழ்த் திரை உலகத்தின் வழக்கப்படி. எல்லோரும் எல்லோரையும் ''அண்ணே'' போட்டுக் கூப்பிடுவது ராஜீவுக்குப் பிடிக்காத சமாசாரம். அவனை எல்லோரும் ''சார்'' என்றே அழைக்க வேண்டும் என்று பழக்கப்படுத்தி யிருந்தான்.

''எல்லாப் படங்களிலேயும் உங்க சொந்த தலை முடியையே உபயோகப்படுத்தி யிருக்கிங்க.''

''இனிமேலும் தொடர்ந்து அப்படியே தான் செய்யப் போறேன். நீ கொண்டுவர விக்கையெல்லாம் பயன்படுத்தி யிருந்தா, இந்நேரம் என் தலை வழுக்கையாகி இருக்கும்'' என்றான் ராஜீவ், சிரித்துக்கொண்டே. வாஸ்தவம்தான். தேவைப் பட்டாலும் தேவை யில்லா விட்டாலும் பெரும்பாலான தென்னிந்திய நடிகர்கள் டோப்பாக்களை வழக்கமாக உபயோகப்படுத்தி வந்தார்கள். அதன் விளைவாக அவர்களில் பலரின் தலை அகாலமாக வழுக்கை ஆகிவிட்டிருந்தது.

ராஜீவ் இதற்கு விதி விலக்கு. அவன் தலை முடி அடர்த்தியாக நல்ல கறுப்பு நிறத்தில் இருந்தது. இப்பொழுதுதான் காதோரத்தில் இலேசாக நரை தெரிய ஆரம்பித்திருந்தது. கறுப்பு ஐ-ப்ரோ பென்சிலால் கொஞ்சம் டச்-அப் செய்தவுடன் நரை மறைந்துவிட்டது.

''அந்த விக் வேண்டாம்.''

''சரி, சார்.''

''காசி!''

காஸ்டியூமர் காசி அன்று ராஜீவ் அணிய வேண்டிய வெள்ளை நிற சூட்டைத் தயாராகப் பிடித்துக் கொண்டு நின்றான். பின்னால் இரண்டு உதவியாளர்கள் நின்றார்கள். ஒருவன் கையில் ராஜீவ் அணிய வேண்டிய ஷூக்கள், இன்னொருவன் கையில் ராஜீவுடைய பெல்ட், மோதிரங்கள், கைக் கடிகாரம். ஒருவன் டிரௌசரை அணிய உதவி செய்ய, இன்னொருவன் கோட்டை மாட்டி விட, மூன்றாமவன் பூட் லேஸ்களைக் கட்டி விட, கண் இமைக்கும் நேரத்தில் ராஜீவ் அன்றைய படப்பிடிப்புக்குத் தயாராகிவிட்டான்.

வெள்ளை வெளேர் என்று பளிச்சிட்ட கோட்டின் மீது இல்லாத தூசு புள்ளிகளைத் தட்டி விட்டுக் கொண்டு காசி ராஜீவைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டான். ஏற்கனவே நன்றாகப் படிந்து வாரப்பட்ட ராஜீவின் தலையை மாணிக்கம் மீண்டும் மீண்டும் சீப்பால் வருடி விட்டான். ராஜீவ் தனது கையை நீட்டினான். அவனுடைய பர்ஸனல் அஸிஸ்டெண்ட் முத்து அவன் கையில் ஒரு பாட்டில் நீனா ரிஸ்ஸி சென்டைக் கொடுத்தான். விலை உயர்ந்த அந்த ஃபிரெஞ்சு சென்டை ராஜீவ் தன் மீது தாராளமாக ஸ்ப்ரே செய்துகொண்டான். தன்னுடைய ரோலக்ஸ் சப்மரீனர் வாட்சைப் பார்த்தான். மணி 8.50 ஆகி விட்டிருந்தது.

''டிஃபன் சாப்பிடறீங்களா சார்?'' என்று முத்து விசாரித்தான்.

''வேண்டாம். இப்போ டைம் இல்லே.''

மேக்-அப் அறையை விட்டு வெளியேறப் போகும்போது சுரேஷ் திடீரென்று உள்ளே வந்தான்.

''சார்....''

''என்ன?''

''உங்களைப் பார்க்கச் சில கல்லூரி மாணவிகள் வந்திருக்காங்க சார். உங்களுக்காக அரை மணி நேரமா கீழே காத்துக்கிட்டு இருக்காங்க'' என்று சுரேஷ் சொன்னான்.

(தொடரும்)

---

''பொருத்தமற்ற காட்சி''

## அவன் அவள் அது

ஹோமத்தின்போது நெய் விடுவது போன்ற அருவருக்கத்தக்க Symbolic shot அவசியமா?

மருதகுளம்

மில்டன் மாரிஸ் ஆரான்



குழந்தைப் பேறு அற்ற மருமகள் செயற்கை முறையில் தனது கணவனின் ஜீவ அணுவை இன்னொரு பெண்ணுக்கு ஊசி மூலம் செலுத்தி அதன் மூலம் தனக்கு ஒரு மகனோ மகளோ கிடைக்கலாம் என்ற ஆசையில் ஆஸ்பத்திரிக்குத் தனது கணவனை அழைத்து வருகிறாள். அதே நேரம் விவரம் ஏதும் அறியாத அவளது மாமனார், அவளுக்காகவும் தன் மகனுக்காகவும் வீட்டில் நிறைய புரோகிதர்களைக் கூட்டி புத்திர காமேஷ்டி யாகம் நடத்துகிறார். அந்த ''ஜரனி''யைத் தான் படம் பிடித்துக் காட்ட எண்ணினோம். நாங்கள் உங்களுக்குப் பிள்ளையார் பிடித்துக் காட்டலாம் என்றுதான் நினைத்தோம். அது குரங்காக அமைந்துவிட்டது என நீங்கள் கருதுகிறீர்கள். மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு! மன்னிப்புக் கோருகிறோம்.

—விச

# நிம்மதி

மும்தாஜ் யாசீன்



மழை சற்றுக் குறைந்ததும் வீதியில் நடமாட்டம் ஆரம்பித்தது. கனகுவை ஒரு ஜவுளிக் கடைப் பந்தலில் நிற்க வைத்து விட்டுப் போயிருந்த புருஷனும் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வந்து சேர்ந்தான். முதல் கேள்வியாக, ''பெரியவர் இருந்தாரா?'' என்று கேட்டாள் அவள்.

''ம்....''

''பணம் குடுத்தாரா?''

''நாளைக்குத் தர்றேனனுட்டாரு.''

''நாளைக்கா?''

அவளது தலையைத்துவட்டி விடுவதற்காகச் சேலை முந்தானையைத் துழாவிய அவளது கரங்கள் அப்படியே நின்றன.

''நானும் மொதலாளி கிட்ட அப்பவே கேட்டுட்டேன். வாரக் கூலிய தெனக் கூலியா மாத்திக் குடுத்திருங்கன்னு. சரின்னு தான் சொன்னார். இப்பக் கேக்கப் போற நேரத்திலே ஒரு பார்ட்டி வந்திருச்சு. ஏவாரம் பேசற நேரத்துல பணம் குடுத்துட்டுப் பேசுங்கன்னு குறுக்கால நிக்க முடியும்?''

இதில் நியாயம் இருப்பதாகவோ, இதற்கு மேல் அவனால் என்ன செய்ய முடியும் என்றோ அவள் யோசிக்கவில்லை. இரவு உணவுக்காகக் காத்திருக்கும் குழந்தைகளின் பசி முகங்களே அவளது கண்களில் தெரிந்தன. ''ஒனக்குத் தைரியம் இல்லாட்டிப் போவுது, நா வேணாப் போயி வாங்கி யாரவா?'' என்று கேட்டாள் அவள்.

''வேணாம். நீ அங்கெல்லாம் போக வேணாம்.''

''ஏன்? போனாக்கா என்ன?''

''சொன்னாக் கேப்பியா.... போடி வீட்டுக்கு'' — அவனுக்குக் கோபம் வந்தது.

'சட்'டென்று அவள் முகம் சிறுத்தது. எங்கோ, எதன் மீதோ தோன்றிய எரிச்சலில் ''சித்த இரு நானும் வந்துட்டேன்'' என்று அவன் கூறியதைப் பொருட்படுத்தாமல் 'விடுவிடு'வென்று நடக்க ஆரம்பித்தாள் அவள்.

• • •

பெட்டிக் கடையில் பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு திரும்பிய ஆறுமுகத்துக்கு ஏமாற்றமாயிருந்தது. அதற்குள் அவள் போய்விட்டிருந்தாள்.

கொஞ்ச தூரத்தில் பாதை இரண்டாகப் பிரிந்தது. ஒன்று, அவனது குடிசைக்கு. மற்றது' வேலை பார்க்கிற விறகு டெப்போவுக்கு. முதலில் பீடியைப் புகைத்துக் கொண்டே குடிசைக்குப் போகிற பாதை வழியாக நடந்தான். கண்ணுக்கு எட்டிய தூரம் வரையிலும் அவளைக் காணவில்லை. திடீரென்று அவனுக்குச் சந்தேகம் வந்தது. ''ஒருவேளை டெப்போவுக்குப் போயிருப்பாளோ?''

'அசாத்திய துணிச்சல்காரி அவள். தனது சொல்லை மதிக்காமல் போயிருக்கவும் கூடும்.'

மனத்துக்குள் 'ஜிவ்'வென்று என்னவோ இழுபட்டது.

''வரவர சிறுக்கி மகளுக்குக் கொழுப்பு ஏறிக்கிட்டுத்தாம் போகுது.''

திரும்பி வந்து மீண்டும் விறகு டெப்போவை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

முதலாளியைப் பற்றி அவனுக்கு ஒன்று மில்லே. அவரது மகன் — சின்ன முதலாளியை— நினைக்கும்போதுதான் பயமாக இருந்தது. செடியில் சேலே சுற்றியிருந்தால் கூட நின்று பார்த்துவிட்டுப் போகிற ஜாதி அவன். டெப்போவில் சின்ன வயது கமைக் கூலிப் பெண்களின் நிறையக் கதைகள் இவனுக்குத் தெரியும். தெரிந்து என்ன? உத்திரவாத மான வேலைக்கும், சலவைத் தாள் பலிகக் கும், புதுச் சேலைக்கும் வேறு வழி? சின்ன முதலாளியின் 'ஏஜெண்டு' ராமாத்தாளின் காவிப் பல் சிரிப்புக்குப் பல பேர் பணிந்து போய் விடுகிறார்கள்.

கனகுவும் புருஷனுடன் அங்கு வேலை பார்த்தவள்தான். ராமாத்தாளுடன் நெருங் கிப் பழகவே ஆறுமுகம் வேலைக்கு வரவேண் டாம் என்று சொல்லி விட்டான். உள்ளூற ஏதோ ஒரு சம்சயம். குறுகுறுப்பு. தற்செய லாகக் கூட, டிப்போவுக்கு வர அனுமதிப்ப தில்லே.

''அவ்வளோ சொல்லி யிருந்தும் இப்ப ஏம்போனு? என்ன காரணம்?''

ஆறுமுகத்துக்கு என்னவெல்லாமோ தோன்றின.

டிப்போவுக்கு அவன் போனபோது பெரிய முதலாளி மட்டுமே அங்கு இருந்தார். அவனைக் கண்டதும், ''என்னடா ஆறுமுகம்! இன்னுமா நீ போகலே?'' என்று கேட்டார்.

''ஆமாங்க.... வந்து.....''

அவனுக்குச் சரியாகப் பேச்சு வரவில்லே. கண்கள் இங்கும் அங்குமாக அலேந்தன. அம்பாரமாகக் குவிந்து கிடந்த விறகு மறைப்பில் பார்வை நிலேத்தது.

''கூலி கேட்டல்ல? சின்னவன் இருந்தாக் கூட்டியா, கல்லாச்சாவி அவங்கிட்ட இருக்கு!''

ஆறுமுகம் சின்ன முதலாளியைத் தேடி ஞன்.

''அவர் சித்த முந்திதான் வெளியே போனுர்'' என்முன் வாட்ச்மேன்.

''அப்படி என்ன அவசரம்? பெரியவர் கிட்டக் கூடச் சொல்லாம?''

''அவசியம் சொல்லணுமா?'' வாட்ச்மேன் கண்ணைச் சிமிட்டிக் கொண்டு சிரித்தான். ''ராமாத்தா வந்திருக்க....''

யாராவது புதிய சிராக்கி கிட்டும்போது மட்டுமே இந்நேரத்தில் அவன் வருவது வழக்கம்.

ஆறுமுகத்துக்கு நெஞ்சில் கோடாரி இறங்கிய மாதிரி இருந்தது. கேட்ட வேகத் தில் திரும்பி நடக்க ஆரம்பித்தான்..

சி.என். அண்ணாதுரை
வேலைக்காரி

என்.எஸ். கிருஷ்ணன்
மணமகள்



சிறு தூறலாக இருந்தாலும் குடிசைக்கு வருவதற்குள் தெப்பமாக நனைந்து விட்டான் அவன்.

குழந்தைகள் மூன்றும் குடிசைக்கு முன் தேங்கியிருந்த நீரில் காகிதக் கப்பல்கள் விட்டுக் கொண்டிருந்தன.

''அம்மா எங்கே? இங்கே வந்தாளா?''

மூத்த பெண்ணைப் பார்த்து வினவினன். விளையாட்டு முகப்பில் இருந்த அதற்கு இவன் கேட்டது காதில் விழவில்லே.

''கழுத.... நா என்ன கேக்கறேன். நீ என்ன செஞ்சிக்கிட்டிருக்கே?''

'டளா'ரென்று முதுகில் ஒன்று வைத்தான். அது 'வே' என்று கத்திக் கொண்டு உள்ளே ஓடிற்று. கப்பல்களே விட்டு விட்டுத் தன் னேக் காத்துக்கொள்ள. 'நடுவனும்' அவ னுக்குப் பின்னுல் ஓடினன். கைக் குழந்தை மட்டும் விவரம் புரியாமல் இவனது மடியையே குறியாக வைத்து, தாவி வந்து, ''அப்பா....பிச்சக்கோத்து....'' என்றது.

''சனியன்களா.....''

ஆறுமுகம் பெரிசுகளைத் துரத்திக்கொண்டு உள்ளே செல்லும்போது, கனகு வாசலில் வந்து நின்முள். ''பட்டினி கிடக்கிற புள் ளேங்கள ஏய்யா அடிக்கிறே? அதும் பாவம் ஒன்ன விடுமா?'' தைரியம் இருந்தால் அவனே அப்போதே திருப்பித் தாக்கத் தயாராக இருப்பவள் போல் ஆவேசத்துடன் வினவினள்.

அவனுடைய ஆத்திரமும், கோபமும் 'சட்' டென்று அடங்கிவிட. நெருப்பு அணைந்த மாதிரி இருந்தது. புகை மட்டும் வந்தது. ''பாத்தியா... மழைல வெளையாடுறத? நாளைக்கு ஒண்ணுன்னு ஆருடி பாக்கறது?'' என்முன் தன்னை விட்டுக் கொடுத்து விடாமல்.

''ஏன்.... ஏழுரு சீமைகளையும் ஆன்ற ராசா நீதான் இருக்கியே, பாக்க மாட்டே? பொளப்பத்துப் போயி அடிக்கியே. டசிக்கு துன்னு அழுதுச்சங்க. நாந்தான் வெளையாட அனுப்பினேன். இன்னும் அடுப்பப் பத்த வைக்கல்ல. முதல்ல அதுக்கு வழி பாரு...''

அவனுக்குக் கோபம் வருவதையோ, அதனுல் சச்சரவு ஏற்படும் என்பதையோ துளிக்கூட சட்டை செய்யாத தொனியில் அவள் பின் னும் ஏதேதோ பேசிக் கொண்டு போனுள். மற்ற குடும்பத்து ஆண்கள் நடந்துகொள் கிற முறை; இவளொத்த வயசுப் பெண்கள் இருக்கிற இருப்பு; வாழ்கிற வாழ்க்கை....

சாதாரணமாக ஒன்றிரண்டு வார்த்தை களிலேயே 'கருக்'கென்று கோபம் பொத்துக் கொண்டு வந்துவிடுகிற அவனுக்கு இப் போது ஏனே ஒன்றுமே தோன்றவில்லே. பதி லுக்கு மனத்தில் ஒரு மூலையில், ஏதோ ஒரு நிறைவு கூடிக் கொண்டே போயிற்று. அழுகிற குழந்தைகளைச் சமாதானப் படுத்து கிற மாதிரி ''வாங்கடா கண்ணு... படுத் துக்கலாம்'' என்று கூறியபடியே இரண்டு குழந்தைகளையும் இரண்டு கரங்களால் தூக் கிக்கொண்டான் அவன்.

பாய் விரித்துவிட்டுத் திரும்பியபோது, கனகு ஏனே அழகானவளாகத் தெரிந்தாள்!



பிலிப்ஸ்

புதிய பிலிப்ஸ் 3-பாண்டு

# கமாண்டர்

## இயந்திர வடிவிலே எழிலோங்கியது



ரூ. 495/-*

- இணையற்ற எர்கோனுமிக் அமைப்பு
- பாண்டு தேர்வுக்கும் ஆன்-ஆஃப் வசதிக்கும் டாகிள் ஸ்விட்ச்கள்
- செட்டினுள்ளே ஓர் அடாப்டர் யூனிட்டைப் பொருத்தி மின்சாரத்திற்கு எளிதில் மாற்றலாம். (அடாப்டர் மாடல் 3012. ரூ. 60*)

* சில்லறை விற்பனை உச்ச விலை, எக்ஸைஸ் வரி உள்ளிட்டது.
மாநில விற்பனை வரி மேலும் இதர தல வரிகள் தனி.

**உன்னதமானவற்றை உங்களுக்கே வழங்க விரும்புகிறோம்.** இந்தியாவில் 50 ஆண்டுகள்

CASPR-726-203 TM

# கடல் ராணி

சாண்டில்யன்

அத்தியாயம் 47

## முத்திரைக் கடிதம்

இரு அழகிகளையும் தனது இரும்புக் கரங்களால் இழுத்து ஒருக்களிக்கச் செய்து அணைத்துக் கொண்ட இந்திரஜித் அனந்த் சாதாரணமாக இந்திர போகத்தில் இருந்திருக்கலாம். இரு அழகிகளின் கெட்டிப்பட்ட மார்பகங்கள் ஒவ்வொன்று அவன் மீது பக்கங்களில் அழுந்தியதாலும் மற்ற அவயச் சிறப்புத் திண்மைகளும் அவன் மீது கடுமையாக இடித்ததாலும் அவன் காமக் கடலில் மூழ்கியிருக்கலாம். ஆனால் முற்றும் மாறாக அவன் தன்மீதும் இரு பெண்கள் மீதும் பட்டுப் பட்டு உலாவிய வட்டமான கண்ணாடி பிரதிபலித்த கதிரவன் ஜோதியையே கவனித்துக் கொண்டிருந்தான்.

இரு பெண்களின் நிலை மட்டும் அவன் நிலைக்கு முற்றும் மாறுபட்டு இருந்தது. வலது கரத்தை இந்திரஜித் தனது இடைக்கும் பாறைக்கும் இடையில் கொடுத்துத் தனது உடலையே புரட்டி அணைத்ததால் பலமாக ஏற்பட்ட புருஷ ஸ்பரிசத்தில் அடியோடு சுய நிலை இழந்தாள் ரத்னா. அந்த முரட்டுக் கை தன் இடையை எத்தனை நசுக்கி விட்டது! உடலைப் புரட்டித் தனக்காக இழுத்தபோது முதுகையும் எத்தனை வலிக்கச் செய்து விட்டதென்பதை உணர்ந்த கடல் ராணி வலியில்தான் எத்தனை சுகமிருக்கிறது?' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். கடற் போர்களில் எத்தனையோ வீரர்களைப் புரட்டி அடித்திருக்கும் தனக்கு அப்பொழுதெல்லாம் ஏற்படாத மன நெகிழ்ச்சி அனந்தின் அணைப்பில்தான் ஏற்பட்டிருக்கிறது என்பதையும் எண்ணிப் பார்த்தான். 'எப்பேர்ப்பட்ட முரட்டுப் பெண்ணுக்கும் எங்கோ ஒருவன் பிறந்திருக்கிறான்' என்று தனது தகப்பனார் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்ததில் எத்தனை உண்மை இருக்கிறது என்றும் நினைத்தாள். அப்பொழுது, அவள் உடலின் பல பகுதிகள் கெட்டிப்பட்டன, சில பகுதிகள் பலவீனப் பட்டன. மாற்றம் எப்படி இருந்தாலும், எதிர்பார்ப்பும் இம்சையும் ஒரே மாதிரிதான் இருக்கிறது என்பதை உணர்ந்த கடல் ராணி தனக்குத் தானே வெட்க நகை கொண்டாள்.

சாருவின் நிலையோ கடல் ராணிக்கு எந்த விதத்திலும் குறைந்ததாயில்லை. இடது கை அவள் இடைக்குக் கீழே வந்ததுமே அவள் சிறிது உருண்டதால், கை இடைக்குக் கீழேயும் சிறிது சென்று திரும்பியதால், அவள் உடல் லேசாக நடுங்கியது. அந்தக் கை அவளைத் திருப்ப அவசியமில்லாது போயிற்று. அது திருப்புவதாக நினைத்துக் கொண்டு அவளே திரும்பி அவன் மீது இணைந்து விட்டதால் ''நானே எதற்காக இவர் மீது விழுகிறேன்? எனக்கு வெட்கம் என்பதே கிடையாதா? இவர் என்னைப் பற்றி என்ன நினைப்பார்? என்ன நினைக்க முடியும்? 'சாரு ராணியை விட பலவீனமானவள், ஆகையால் சுலபமாகத் தூக்கி விட்டேன்' என்றுதானே நினைப்பார்? நினைத்து விட்டுப் போகட்டுமே'' என்று சொல்லிக் கொண்ட சாரு அவனிடம் சற்று அளவுக்கு அதிகமாகவே இணைந்தாள். தனது கையொன்றை அனந்தின் உடலுக்குக் குறுக்கே போட்டு, ஏற்கனவே அவன் உடலுக்குக் குறுக்கே கிடந்த ராணியின் கையைப் பற்றினாள். இருவர் கைகளும் இணைந்து அவனை இறுக்கின.

இந்த இன்பத்தை யெல்லாம் ஓரளவு அனுபவித்தாலும் பூர்ண இச்சையைக் காட்

டாத இந்திரஜித் அனந்த், தங்கள் மூவர் மீதும் ஓடிய வட்ட ஜோதியையே கவனித்துக்கொண்டிருந்தான். நாலைந்து தடவை உலாவியபின் அது மறைந்துவிடவே ''அப்பாடி!'' என்று பெருமூச்சு விட்டான்.

''என்ன அப்பாடி?'' என்று கேட்டாள் சாரு தனது தலையைச் சிறிது தூக்கி.

''ரொம்ப அலுப்போ?'' என்று வினவினாள் ராணியும் சிறிது தலை தூக்கி, பங்கய விழிகளை அவன் மீது ஓட்டி.

''அலுப்பில்லாமல் எப்படி இருக்கும்? பெரிய காரியத்தைச் சாதித்திருக்கிறார்'' என்றாள் சாரு புன்முறுவல் கொண்டு.

ராணி மெல்ல நகைத்தாள். ''என்ன அப்பேர்ப்பட்ட காரியம் நடந்துவிட்டது இப்பொழுது?'' என்று கேட்கவும் செய்தாள்.

சாரு தனது கருவிழிகளை ராணி மீது திருப்பினாள். ''சே! ராணி, இது என்ன பேச்சு?'' என்று கோபத்துடனும் நாணத்துடனும் சொன்னாள்.

ராணி மேலும் நகைத்தாள் கலகலவென்று. ''நாணமா சாரு?'' என்றும் வினவினாள்.

''பெண்களுக்கு அதுதானே முக்கிய ஆபரணம்?'' என்று சாரு கேட்டாள்.

''ஆம்'' ராணியின் ஒப்புதலில் கேலி இருந்தது.

''என்ன ஆம்?''

''முக்கிய ஆபரணம் என்று சொன்னாய்.''

''சொன்னேன்.''

''அதை ஒப்புக் கொண்டேன்.''

''ஏதோ உள்ளர்த்தம் வைத்துப் பேசுகிறாய் ராணி.''

''உள்ளர்த்தம் ஏதுமில்லை. உனக்குப் புரியாத அர்த்தமில்லை.''

''என்ன புரிகிறது எனக்கு?''

''ஆபரணத்தைச் சில சமயங்களில் கழற்றி வைக்கிறோமல்லவா?''

ராணியின் கேள்வியின் பொருள் நன்றாகப் புரிந்ததால், சாருவும் நாணத்தை விட்டு நகைத்தாள். ''ராணி!'' என்று சிறிது கடுமையாகவும் குரல் கொடுத்தாள்.

''என்ன சாரு?'' ராணியின் குரலில் கேலி இருந்தது.

''ஆனாலும் நீ மோசம்'' என்றாள் சாரு.

''எப்படி?'' என்று வினவினாள் ராணி.

''பட்டவர்த்தனமாகப் பேசுகிறாய்!''

''அது கூடாதாக்கும்?''

''கூடாது. எதிலும் ஒளிவு மறைவு வேண்டும்.''

ராணி கலகலவென நகைத்தாள். ''ஏன் நகைக்கிறாய்?'' என்று சாரு கோபத்துடன் கேட்டாள்.

''நாமிருப்பது மலைப் பாறை'' என்று ராணி சுட்டிக் காட்டினாள்.

''ஆம்'' என்றாள் சாரு.

''பகல் நன்றாக ஏறியிருக்கிறது.''

''ஆம். பாறைகூடச் சுடுகிறது.''

''அதைவிட உணர்ச்சிகள் சுடவில்லை?''

''ராணி!''





பேராசிரியர் கல்கி
தியாக பூமி



ப. நீலகண்டன்
மாட்டுக்கார வேலன்

''அவட்டிக் கொள்ளாதே சாரு. கதிரவன் நன்றாக வலம் வரும் சமயத்தில் நம்மை இவர் கட்டி அணைத்துக் கொண்டு பாறை மேல் கிடக்கிறார்.''

''அதனாலென்ன?''

''அதைத்தான் அவனும் கேட்கிறான்?''

''யார்?''

''டெலஸ்கோப்பின் மூலம் நம்மைக் கவனிப்பவன்.''

''ஐயையோ!''

''என்ன ஐயையோ?''

''டெலஸ்கோப்பின் மூலம் நமது நிலையை இன்னொருவன் பார்க்கிறானா?''

''இல்லை, இருவர்.''

''இருவரா?''

''ஆம். காமஜோதி முதலில் உலாவிற்று சில தடவைகள். பிறகு மறைந்தது. இப்பொழுது மறுபடியும் உலாவுகிறது என்று விளக்கிய கடல் ராணி ''சீ! கண்ணில் விழுகிறது ஒளி'' என்று முகத்தை அனந்தின் மார்பில் புதைத்துக் கொண்டாள்.

''என் கண்ணிலும் விழுகிறது'' என்று சாருவும் முகத்தை ராணியின் முகத்துக்குப் பக்கத்தில் பதிய வைத்தாள்.

அதுவரை மௌனமாயிருந்த அனந்த். இரு பெண்களின் ஆட்டத்துக்கும் ஆட்பட்ட அனந்த். ''இது மிக நேர்த்தி'' என்று கூறிப் புன்முறுவல் கொண்டான்.

''எது நேர்த்தி?'' முகத்தைச் சிறிது நிமிர்த்திக் கேட்டாள் ராணி.

''சொல்லுங்கள்'' என்றாள் சாரு முகத்தை நிமிர்த்தாமலே.

''இன்னுமிருவர் நம்மைப் பார்க்கிறார்கள் என்பதை அறிந்த பின்பும் என் பிராணனை வாங்குகிறீர்களே. அதுதான்!'' என்றான் அனந்த் நகைத்து.

''பிராணனை வாங்குகிறோமா?'' என்று சீறினாள் ராணி.

''இப்படி இழுத்துக் கட்டும்படி நாங்கள் கேட்டோமா?'' என்று பட்டவர்த்தனமாகச் சாரு கேட்டாள்.

''சாரு'' என்றாள் ராணி.

''உம்.''

''பட்டவர்த்தனமாகப் பேசாதே!''

''ஏன்?''

''எதிலும் ஒளிவு மறைவு வேண்டும்''

இதை ராணி சொன்னதும் மூவருமே நகைத்தார்கள். அந்த நகைப்புக்குப் பிறகு அனந்த் எழுந்திருந்தான். அவ்விருவரையும் சிறிது நீக்கிக் கொண்டு எழுந்ததும் அவர் களைத் திரும்பிப் பாராமல் நேராக அறையை நோக்கிச் சென்றான்.

''அறைக்கா போகிறீர்கள்?'' என்று ராணி கேட்டாள் பாறை மீது உட்கார்ந்த நிலையில்

''ஆம்'' என்றான் அனந்த். திரும்பிப் பார்த்து.

''எதற்காக?'' என்று கேட்டாள் சாரு.

''அங்குதான் மறைவிருக்கிறது'' என்று கூறிவிட்டு அனந்த் நடந்தான் அறையை நோக்கி

அவன் செல்வதைப் பார்த்த சாரு ராணியைப் பார்த்து. ''ராணி! இவருக்கு அடியோடு வெட்கமில்லை'' என்றாள்.

''துணிந்த கட்டை.'' என்றாள் ராணி.

''நாம் என்ன செய்வது இப்போது?'' என்று சாரு கேட்டாள்.

''செய்வதற்கு என்ன இருக்கிறது?'' என்று ராணி வினவினாள் பதிலுக்கு.

''அவர் அறைக்குள் நுழைந்துவிட்டார் ராணி'' என்றாள் சாரு.

''நீ வேண்டுமானால் போ''

''அத்தனை அல்பமாக என்னை நினைத்து விட்டாயா ராணி?''

''இதில் அல்பம் என்ன இருக்கிறது?''

''நமக்கு இன்னும் திருமணமாகவில்லை?''

''அதனால்?''

''கட்டுப்பாடு வேண்டும்''

''கட்டுப்பாடுதான் பகிரங்கமாகி விட்டதே?''

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருந்த சமயத்தில் இன்னும் வேகமாக நடந்து கொண்டான் அனந்த். அறைக்குள்ளே

---

''பொருத்தமற்ற காட்சி''

## மழைலைப் பட்டாளம்

கவாஸ்கர் பந்தை நடுவரிடம் கொடுத்து விடுகிறான். பிறகு அக்காவின் மாமனார் வீட்டில் வந்தபொழுது பந்து கையில் எப்படி வந்தது?

கொடா ரோடு ர. நாகராஜ்

பீடம் எடுக்கும்போது இவன் விசிலடித்துப் பந்தைக் கேட்பது போல ஒரு காட்சி அமைத்திருந்தோம். படத்தை முழுதும் எடுத்த பின் பார்த்தால் கிட்டத்தட்ட 16000 அடி வளர்ந்துவிட்டது. எங்களுக்கோ 13000 அடிக்கு மேலிருந்தால் பல்வேறு பிரச்சினைகள், வரி அதிகமாகக் கட்ட வேண்டியிருக்கும். இந்த நிலையில் குறைக்க வேண்டிய பல காட்சிகளை வரிசைப்படுத்தினோம். கதைக்கு முக்கியமான காட்சிகளை எடுக்க முடியாததால் இது மாதிரிக் காட்சிகள் சில வெட்டப்பட்டு விட்டன.

—லக்ஷ்மி



யிருந்த இரு பெண்களின் நீராடிய துண்டங்களை எடுத்து வந்து அறைக்கு வெளியே நன்ருகப் பிழிந்து, உதறி, ஒவ்வொன்ருகப் பாறை மீது உலர்த்திஞன்.

இதைக் கண்ட இரு பெண்களின் கண்களிலும் சீற்றம் மிதமிஞ்சித் தெரிந்தது.

''பார்த்தாயா ராணி?'' என்று சாரு வினவிஞள்.

''பார்த்தேன்'' என்ருள் ராணி.

''நம்மை அவமானப்படுத்துகிருர்.''

''வேண்டுமென்றே செய்கிருர்.''

''பெருத்த போக்கிரி இவர்.''

''சந்தேகமில்லை.''

இப்படிச் சொல்லிக் கொண்டே இரு பெண்களும் அறையை நோக்கி விருவிரு என நடந்தார்கள். அவன் முன்பு வந்து நின்றதும் தரையைத் தங்கள் கமலப் பாதங்களால் உதைத்தார்கள். ''உங்களுக்கு வெட்கமில்லை?'' என்று ராணி வினவிஞள்.

''கிடையாது.'' சட்டென்று வந்தது அனந்தின் பதில்.

''எங்களுக்கு இருக்கிறது'' என்று சாரு சீறிஞள்.

''எது?''

''வெட்கம்.''

''அப்படியா?'' இதை வெகு வேடிக்கையாகக் கேட்டான் அனந்த். புன்முறுவலும் கொண்டான். அவன் கண்கள் நகைத்தவை அவ்விருவரையும் நோக்கி.

இதஞல் வெகுண்ட ராணி ''எங்கள் சேலைத் துண்டங்களை நீங்கள் உலர்த்துவதைப் பார்த்தால் மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்?'' என்று கேட்டாள்.

''பெண்ணுக்கு அடிமை, இல்லை இல்லை, பெண்களுக்கு அடிமை என்று நினைப்பார்கள். நீங்கள் இருவர் இருக்கிறீர்கள் அல்லவா?'' என்ருன் அனந்த் சர்வ சாதாரணமாக.

''அப்படி நினைப்பதைப் பற்றி....'' சாரு பேசிஞள், தயங்கிஞள்.

''கவலை இல்லை'' என்ருன் அனந்த்.

''எங்களுக்குக் கவலை இருக்கிறது?'' என்ருள் ராணி.

''என்ன கவலை?''



டி. பி. ராஜலக்ஷ்மி
மிஸ் கமலா



கே. சுப்பிரமணியம்
பால யோகினி

''எங்களைப் பற்றிக் கேவலமாகப் பேசுவார்கள்...'' என்ற சாரு சொற்களை முடிக்கு முன்பாக அவ்விருவரையும் தழுவி இழுத்துக் கொண்டு அறைக்குள் சென்ருன் அனந்த். உள்ளே சென்றதும் அவன் நடவடிக்கை முற்றிலும் மாறியது. ''ராணி! நீ இன்றிரவு சுரங்க வழியில் பாண்டவகட்டுக்குப் போக வேண்டும். இந்தக் கடிதம் கஜேந்திக்கு உடனடியாகப் போய்ச் சேர ஏற்பாடு செய்ய வேண்டும்.'' என்று கூறித் தன் மடியிலிருந்த கடிதத்தை எடுத்துக் கொடுத்தான். ''கடிதம் நனையவில்லை. இதைப் பாதுகாக்க உள்ளே பெல்ட் போட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்றும் விளக்கிஞன்.

கடிதம் முத்திரை வைக்கப்பட்டிருப்பதை ராணி கண்டாள். புரிந்து கொண்டதற்கு அடையாளமாகத் தலையையும் ஆட்டிஞள். ''இதற்காகத்தான் இத்தனை நாடகமா?'' என்று சாருவும் வாயைப் பிளந்தாள்.

தூரத்தே காஸண்டராவில் இருந்த வில்வரும் ''யூ ஆர் ரைட் டெய்லர், பட் ஐ நெவர் எக்ஸ்பெக்ட் திஸ் ஆப் அனந்த் (நீ சொன்னது உண்மை டெய்லர், இதை நான் அனந்திடம் எதிர்பார்க்கவில்லை)'' என்று கூறவும் செய்தான்.

டெய்லர் நகைத்தான். ''வில்வர்! எவ்வரி மான் ஈஸ் எ ஃபூல் வேர் எ உமன் ஈஸ் கன்ஸர்ண்ட். திஸ் பெலோ ஹாஸ் டூ (வில்வர்! பெண் சம்பந்தப்படும்போது எந்தப் புருஷனும் முட்டாள். இவனுக்கோ இரு பெண்கள் இருக்கிருர்கள்)'' என்று சுட்டிக் காட்டிஞன்.

(தொடரும்)

''பொருந்த மற்ற காட்சி''

## பூட்டாத பூட்டுக்கள்!



''கன்னியம்மா கணவன் இருக்கையில் இன்னெருவனிடம் தன்னை இழந்தது தாய்மை ஏக்கத்திஞல்தான் என்று சொல்ல முயன்றிருக்கிறீர்கள். ஆக, அவன் உடன்பட்டான்; அவள் செயல்பட்டாள். பின்னுல், அந்த இன்னெருவன் மீது அவள் சாணியைக் கரைத்துக் கொட்டித், துடைப்பத்தால் அடிக்கிறுள். நேர்ந்து விட்ட தவறுக்கு இருவருமே பொறுப்பு என்னும் போது, குற்றவாளியே கூட்டாளியைத் தண்டிப்பது ஏற்கும்படியாக இல்லையே?''

சென்னை-17

குமரி அமுதன்

நேர்ந்துவிட்ட தவறுக்கு இருவருமே பொறுப்புதான். ஆனுல் துடைப்பத்தால் அடிவாங்கும் கூட்டாளி செய்த தவறு நம்பிக்கைத் துரோகம். திட்டமிட்ட ஏமாற்று வேலை.

குழந்தை ஏக்கத்தோடு தன் வீட்டில் தனிமையில் புழுங்கிக்கொண்டிருந்தவளை — கொஞ்சம் கொஞ்சமாகத் தன் பக்கம் — சாமர்த்தியமாக— திட்டம் போட்டு இழுத்தவன் தியாகு. அப்பேர்ப்பட்டவன் பிறகு தேடிவந்து புகலிடம் கேட்ட அவளைக் கருணை இல்லாமல் துரத்தி அடிக்கிறுன். கடைசியில் அவனே அவளுக்கு அறிவுரை சொல்ல வருகிறுன். அதுவும் எப்பேர்ப்பட்ட அறிவுரை! கன்னியம்மா அவனுக்குத் தரும் தண்டனை கம்மிதான்.

—மகேந்திரன்

இலக்கியங்களிலே துகில் படைப்புகள்—9

# மாயனே,

கோகுல பாலன் கண்ணன் என்றும் தீராத விளையாட்டுப் பிள்ளை. அதிகாலையில் தாம்மரைப் பொய்கையில் நீராடச் செல்லுகின்றனர், கோபியர் சிறுமிகள். தங்கள் ஆடைகளைக் கரையில் களைந்து விட்டு, தாமரைப் பொய்கையில் இறங்கி நீராடி மகிழ்கின்றனர். அப்போது அங்கே தோன்றுகிருன் மாயக் கண்ணன். அவனது குறும்பு மனம் அவர்களுடன் விளையாட விழைகிறது. எவரும் அறியா வண்ணம் கோபியர்களின் ஆடைகள் அனைத்தையும் கவர்ந்து கொண்டு, அருகிலுள்ள மரத்தின் மீதேறி ஒளிந்து கொள்கிருன். நீராடி முடித்த சிறுமிகள் கரையிலே கிடந்த தங்களுடைய ஆடைகளைக் காணுமல் மனம் தவித்து, பின்னர் மரத்தின் மேல் அவற்றுடன் கிருஷ்ணன் மறைந்திருப்பதைக் கண்டு, அவற்றைத் தங்களிடம் கொடுத்து விடும்படி அவனைப் பலவாருக வேண்டுகின்றனர்.

சூடிக் கொடுத்த சுடர்க் கொடியான ஆண்டாள், அச்சிறுமியருள் ஒருத்தியாகத் தன்னைப் பாவித்து, ஆடையைக் கொடுத்து விடும்படி கிருஷ்ணனிடம் கெஞ்சுகிருள்.

''தோழியரும் நானும் தொழுகிறோம் கோபாலா, துகிலைப் பணித்தருளாயே''

''மாயனே! எங்கள் அமுதே, குருத்திடைக் கூறை பணியாய்''

''நீரிலே நின்று அயர்க்கின்றோம், கோமள ஆயர்தம் கொழுந்தே! பட்டைப் பணித்தருளாயே!''

கோதை நாச்சியாரின் இன்னிசைப் பாசுரங்கள் பத்தும், ஜீவாத்மாவுக்கு அருள் புரிய வேண்டி, பரமாத்மாவை ஆடை வேண்டிக் கெஞ்சுவதாக அமைந்துள்ளன:

—திவ்யப் பிரபந்தம்: நாச்சியார் திருமொழி

*நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம் காலம் காலமாக வந்த இந்தியப் பண்பாட்டைப் பின்பற்றுகிறது. நேர்மையே இந்த ஸ்தாபனத்தின் அடிப்படை. ''செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்'' என்ற குறிக்கோளுடன் செயல்பட்டு மக்களுக்குச் சேவை புரிவதையே தலையாய கடமையாகக் கொண்டுள்ளது நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம்.*





**லக்ஷ்மி மில்ஸ்**
**கம்பெனி லிமிடெட்**
**கோயம்புத்தூர்**

# பட்டைப் பணித்தருளாயே!



தாம் இயக்கிய படங்களில் திரைக்கதை, வசனம் எழுதிய ஐந்து எழுத்தாளர்களின் திறமையை இங்கே விவரிக்கிறார் திரைப்பட இயக்குனர் திரு மாதவன்.

**பாலமுருகன்**

கிராமச் சூழ்நிலையின் கொஞ்சும் எழில் அதோடு இணைந்த கள்ளம் கபடமற்ற மக்கள், இவை எப்படித் தித்திக்கிறதோ அது போல் இனிக்கும் பாலமுருகனின் கிராமியக் கதைகளும். கிராமப்புற சப்ஜெக்ட்டுகள் எழுதுவதில் அவர் நிபுணர்.

அவர் எனது பல படங்களுக்குக் கதை வசனம் எழுதினாலும், இரண்டு படங்கள் என்னால் மறக்க முடியாதவை: 'பட்டிக்காடா பட்டணமா', 'பொண்ணுக்குத் தங்க மனசு'.

இரண்டாவது குறிப்பிட்ட படத்தில் இரண்டு ஆருயிர்க் கல்லூரி நண்பர்கள். ஒருத்தி மாவட்டக் கலெக்டரின் மனைவியாகவும் (விதுபாலா) மற்றவள் கலெக்டர் ஆபீஸ் பியூன் மனைவியாகவும் (ஜெயசித்ரா) வாழ விதி விளையாடுகிறது. செல்வச் செருக்கால் கலெக்டர் மனைவி, தோழி என்றும் பார்க்காது மற்றவளை அவமதிக்கிறாள். விளைவு பெரிய வாக்குவாதம்.

விதுபாலா: நீ கலெக்டர் ஆபீஸ் பியூன் மனைவிதாண்டி. அதுவும் என் புருஷன் கீழே வேலை செய்பவர். உனக்கு என்ன பேச்சு?

ஜெயசித்ரா: நீ பரமசிவனின் கழுத்தில் உள்ள பாம்பு மாதிரி. பாம்பு கருடனைப் பார்த்துச் சௌக்கியமான்னு கேட்டுச்சாம். ஆனா அதுவே கீழே இறங்கி வரும் காலம் உண்டு. காற்று எப்போதும் ஒரே திசையிலே அடிச்சதில்லே.

இந்த வாக்குவாதக் காட்சியை எல்லோரும் பாராட்டினார்கள்.

நறுக்குத் தெறிக்கும் வசனம் எழுதும் பாலமுருகனுக்கு எப்போதும் அசைவச் சாப்பாடு என்றால் உயிர். மூக்கைப் பிடிக்கச் சாப்பிடாமல் மனுஷருக்கு எழுத 'மூட்' வராது.!

**மகேந்திரன்**

'தங்கப் பதக்கம்' நாடகம் சென்னையில் சக்கைப் போடு போட்ட சமயம், அதன் சிறப்பான வசனம் என்னைத் திக்குமுக்காடச் செய்தது. சிவாஜி என்னிடம் அந்த நாடகத்தைத் திரைப்படமாக்கலாமே என்று யோசனை தெரிவித்து, சிவாஜி பிலிம்ஸுக்காக என்னையே டைரக்டராக இருக்கச் சொன்னார். நாடக வசனம் எழுதிய மகேந்திரனையே, திரைக்கும் வசனம் எழுதச் செய்தோம். அதுதான் மகேந்திரன் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது.

படத்தில் கே. ஆர். விஜயா இறக்கும் காட்சி. மேலதிகாரி மூலம் செய்தி கேட்ட எஸ். பி. சௌத்ரி (சிவாஜி) தம்முள் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு வீட்டுக்கு

# என் தோட்டத்தில் மலர்ந்த ஐந்து ரோஜாக்கள்



வருகிறார். வீட்டில் ஒரே கூட்டம். எதுவும் பேசாமல் மாடிக்குச் சென்று மனைவியின் உடலைப் பார்த்து ரொம்பவும் மெல்லிய குரலில், ''தினமும் நான் லேட்டா வரப்போ நீ எனக்காகக் காத்திருப்பே, இன்னிக்கு நான் சீக்கிரம் வந்துட்டேன், நீ தூங்கிட்டியே, அம்மா!'' என்கிறார். சிவாஜி உணர்ச்சிகளை வெளிக்காட்டும் இந்த வரிகளைக் கேட்டுப் படப் பிடிப்பின்போது நான் நெகிழ்ந்தேன்; தியேட்டரிலே மக்கள் அழுவதையும் பார்த்தேன்.

மகேந்திரன் பல பக்கங்கள் வசனம் எழுதுவார். அதில் நான் தேவையானதை மட்டும்தான் எடுத்துக் கொள்வேன் என்பது அவருக்குத் தெரியும். ஆனால் அவரது வசனத்தில் குறைக்கவே மனம் வராது. சிரமப்பட்டுத்தான் 'எடிட்' செய்வேன்.

சாப்பிடுவதற்கு முன்பு சில சமயம் திடீர் என்று மூட் வந்து பாட ஆரம்பித்துவிடு

**மாதவன்**







- வியட்நாம் வீடு சுந்தரம்
- ஆரூர் தாஸ்
- பாலமுருகன்
- மகேந்திரன்
- மௌலி

வார். அதை நான் ஒருத்தன்தான் பொறுமையோடு கேட்பேன்.

### ஆரூர் தாஸ்

குடும்பச் சூழ்நிலைகளை வைத்துக் கொண்டு கொஞ்சமும் அலுக்காமல், ருசியாக எழுதுவது ஒரு கலை. இதில் ஆரூர் தாஸ் தேர்ந்தவர். நான் இயக்கிய "தேனும் பாலும்" படத்துக்கு அவர் வசனம் எழுதினார். மனைவிக்குத் தெரியாமல் புருஷன் வேறு ஒரு பெண்ணுடன் உறவு வைத்துக் கொள்கிறான். இது அவளுக்குத் தெரிந்து விடுகிறது. சில பெண்கள் கணவனை எதிர்த்து வாக்குவாதம் செய்வார்கள். ஒருசிலர் அதை வெளிக்காட்டாமல், மனத்தில் பூட்டி வைத்து வேதனைப் படுவார்கள். இதில் கதாநாயகியாக வரும் பத்மினி இரண்டாம் வகை. ஓர் இடத்தில் "என் புருஷன் ராமனாக இருக்கணும்னு தான் நான் ஆசைப்பட்டேனே தவிர கிருஷ்ணனாக இருக்கக் கூடாது" என்கிறார். இந்த வரிகளில் படத்தின் அடிப்படைக் கருத்தைக், கதாநாயகி மூலம் வெளியே கொண்டு வந்து விட்டது.

காலை டிபன் இட்லியோடு இஞ்சித் தொகையல் சாப்பிடும் இந்த எழுத்தாளரின் இலக்கியத் திறனை நான் ரொம்பவும் ரசிப்பேன்.

### மௌலி

தொழில் தேர்ந்த கதை வசன கர்த்தா டைரக்டர் பட்டியலில் பூத்த புது மலர் மௌலி. நமது பாரம்பரியப் பண்பாட்டினைப் புதுப் பொலிவோடு கொடுப்பதில் மௌலிக்கு நிகர் மௌலிதான்.

எனது 'வீட்டுக்கு வீடு வாசப்படி', 'குருவிக் கூடு' தவிர, வரப்போகும் 'நிட்வர் உமாநாத்' படத்துக்கும் திரைக் கதை மௌலிதான்.

'குருவிக் கூடு' படத்தில் ஒரு காட்சியில், வசதியான குடும்பத்தில் பிறந்த மகள் ஓர் ஏழையைக் காதலித்து மணக்கிறாள். பிறகு ஒரு சமயம் தாயும் மகளும் யதேச்சையாகக் கடைத் தெருவில் சந்திக்கிறார்கள். பெரிய காரில் பவனி வரும் தாய் இளக்காரமாக, "என்னடி சௌக்கியமா?" எனக் கேட்க, "எனக்கென்னம்மா குறைச்சல்?" என்கிறாள் மகள். தாய், "குரல்லே உள்ள தெம்பு முகத்திலே காணோமே!" என்று கூறிக் காரை விட்டு இறங்குகிறாள். தொடர்ந்து, "நடுத்தெருவுக்கு நீயும் உன் புருஷனும் வந்துட்டீங்களாமே!" என்று கேட்க, மகள் சூடாக "நீயும்தாம்மா" என்று பதில் அளிக்கிறாள். ரொம்பவும் சுவையான காட்சி. நையாண்டியும் கலந்த விறுவிறுப்பான வசனம்.

பல நாள் 'பைப்' பிடித்த மௌலி வரும் போது ஒரு ரயில் என்ஜின் வருவது மாதிரி இருக்கும். திடீரென்று சிகரெட்டுக்குத் தாவி விட்டார்.

### வியட்நாம்வீடு சுந்தரம்

நான் இயக்கிய 'வியட்நாம் வீடு', 'ஞான ஒளி' படங்களுக்குத் திரைக் கதைவசனம் தீட்டியவர் சுந்தரம். இரண்டும் நாடகமாக அரங்கேறியவை.

ஆபரேஷனுக்குப் புறப்படு முன், மனைவியிடம், இன்ஷூரன்ஸ் பாலிஸி, அத்தையிடம் பிராவிடெண்ட் பத்திரங்கள் கொடுக்கிறார் பிரஸ்டிஜ் பத்மநாபன். "எனக்கு எதுக்குடா?" புதிரோடு கேட்கும் அத்தையிடம், "நீ முந்திண்டா நேக்கு, நான் முந்திண்டா நோக்கு" என்கிறார். அடுத்து பிள்ளையிடம், "வீட்டுப் பத்திரம் இதிலே இருக்கு. தேவைப்பட்டா அடகு வைச்சுடு, ஆனா வித்துடாதே!" என்கிறார். வியட்நாமின் வசனச் சிறப்புக்கு இவை சாம்பிள்.

இவரிடம் எப்போதும் பல வர்ண பால் பாயிண்ட் பேனாக்கள் உண்டு. எனக்கு இதனால் குழப்பம் நேர்வதுமுண்டு!

பேட்டி: "சித்ரா"

## 11

ராகவன் இறந்து பதினைந்து நாட்கள் கழிந்து விட்டன. ரவி அவர் இறந்து இரண்டு மூன்று நாட்களுக்குத்தான் ஆபீசுக்குப் போகவில்லை. அதன் பிறகு போகத் தொடங்கிவிட்டான். அவனுக்கு வீட்டில் இருக்கப் பிடிக்கவில்லை. வீட்டில் இருந்தால் தகப்பனாரின் நினைவு அடிக்கடி வந்து துன்புறுத்திக் கொண்டிருந்ததுடன் தாயாரின் சோக முகத்தையும் அடிக்கடி பார்க்க வேண்டியிருந்தது. அவன் தாயார் திடீரென்று பாதி உடம்பாகப் போய்விட்டதைப் போல் ஒரு தோற்றம் அவள் முகத்தில் வந்து விட்டது. கணவரின் பேரில் அவளுக்கு எவ்வளவு அன்பு இருந்தது என்பதை அவர் உயிருடனிருந்தபோது அவள் செய்யும் ஒவ்வொரு சிறு காரியத்திலும், பேசுகிற பேச்சிலும் கவனித்து ரவி மகிழ்ந்திருக்கிறான். இப்போது அவள் அந்த அன்பை வெளிப்படுத்துகிற வகையில் பேசும் பேச்சுக்களைக் கேட்டு அவன் நெஞ்சு வெடித்துவிடும் போலத் துயரம் கப்பிக் கொண்டது.



''இனிமே எனக்கு என்ன வேண்டியிருக்கு? அவரே போயிட்டார். நானும் அவர் பின்னாலே போக வேண்டியதுதான். நாளை எண்ணிண்டிருக்கேன். நான் ரொம்ப நாளைக்கு இருக்க மாட்டேன். எனக்கு அவர் ஒரு விதத்துலேயும் மோசம் பண்ணதில்லே. என் மனசு வருத்தப்படும்படியா நடந்துண்டதில்லே. ஆனா கடைசிக் கடைசியா இந்தப் பெரிய வருத்தத்தைக் கொடுத்துட்டுப் போயிட்டார். அவருக்கு முன்னாடியே போயிருக்க வேண்டியவள் நான். அதுக்கு எனக்குக் கொடுத்து வைக்கலே. அவர் கொஞ்சம் அவசரப்பட்டுட்டார். நான் ஏதோ தப்புப் பண்ணிண்டிருக்கிற மாதிரி எனக்குத் தோணறது. அவரை விட்டுட்டு இருக்க என்னாலே முடியலையே. எப்ப பகவான் கண்ணைத் திறந்து பார்த்து என்னை அவர் கிட்டக் கொண்டு போய்ச் சேர்க்கப் போறானோ?'' என்று இப்படி ஏதாவது புலம்பிக்கொண்டே இருக்கலானாள் ஜானகி.

தாயார் அப்படி என்றால் தாத்தா இன்னொரு விதம். வயதான நான் பிழைத்திருக்கும்போது வாழ வேண்டிய மகன் போய்விட்டானே என்கிற வருத்தம் அவரைப் பாதித்திருப்பதை அவர் சொல்லிச் சொல்லிப் பிரலாபிக்கத் தொடங்கினார். தன்னை இழுத்துக் கொண்டு போக வந்த யமன் தவறிப் போய்த் தன் மகனின் உயிரைப் பறித்துக் கொண்டு போய் விட்டதாக அவர் கண்ணீர் பெருக்கிக் கொண்டே இருந்தார்.

உமாவும் உஷாவும் தங்கள் இயற்கையான சிரிப்பையும், கேலிப் பேச்சுக்களையும், விளையாட்டுக்களையும் மறந்து உயிர்ப் பொம்மைகளாக வீட்டில் நடமாடிக்கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்க்கும்போதெல்லாம் ரவிக்குத் தன்மீது சுமந்திருக்கும் பொறுப்பின் பாரம், அவர்களை நல்ல இடங்களில் கல்யாணம் செய்து கொடுத்து வாழ்க்கையில் அவர்கள் மகிழ்ச்சியாக இருப்பதைப் பார்க்க வேண்டும் என்கிற கவலை அவனுக்குத் தோன்றத் தொடங்கியது. அந்தப் பொறுப்பைச் சரியாக நிறைவேற்றத் தன்னால் முடியுமா என்கிற அச்சமும் கூடவே தோன்றும்.

இந்த அச்சம், கவலை, துயரம் இவைகளிலிருந்து ஓரளவாவது விடுபட வேண்டுமானால் ஆபீசுக்குப் போவதுதான் நல்லது என்று நினைத்துத்தான் போகத் தொடங்கினான்.



டி.ஆர். சுந்தரம்
ஆயிரம் தலை வாங்கிய
அபூர்வ சிந்தாமணி



சக்தி கிருஷ்ணசாமி
வீரபாண்டிய
கட்டபொம்மன்

மேலும் வேலையில் சேர்ந்த இரண்டாவது மாதத்திலேயே அதிகமாக லீவு எடுத்துக் கொள்வதும் அவனுக்குச் சரியாகப்படவில்லை. பன்னிரண்டாம் நாள், பதின்மூன்றும் நாள் காரியங்களுக்குக் கூட லீவு எடுத்துக்கொள்ளாமல் லேட் பர்மிஷன் வாங்கிக்கொண்டு ஆபீசுக்குப் போயிருந்தான்.

வழக்கம் போல ராமுவும் அவனும்தான் சைக்கிளில் ஆபீசுக்குப் போய்க் கொண்டிருந்தார்கள்.

அன்றைக்கு ராமு திடீரென்று உமாவைப் பற்றி, அவள் கல்யாணத்தைப் பற்றிப் பேச்செடுத்தான். ரவிக்கு ஆச்சரியமாக இருந்தது.

''உமா கல்யாணத்தைப் பற்றி ஏதாவது யோசிக்கிறியா ரவி?''

''இப்ப எப்படி? ஒரு வருஷம் வீட்டிலே சுப காரியம் ஒண்ணும் நடக்கக் கூடாதுன்னு சொல்லுவாங்களே இல்லியா?''

''அப்படியில்லே. ஒரு வருஷத்துக்குள்ளே கல்யாணம் செஞ்சா நல்லதுன்னு சொல்லுவாங்க. அந்தக் கன்யாதான பலன் செத்துப்போன தகப்பனுக்குக் கிடைக்கும்னு சொல்லுவாங்க.''

''பார்க்கலாம். இனிமேல்தான் முயற்சி செய்யணும். நல்ல இடமா கிடைக்கணும். செலவுக்கெல்லாம் வேண்டிய பணத்துக்கு ஏற்பாடு செய்யணும். ஃபாதருக்கு ஸ்கூல் லேந்து எவ்வளவு பிராவிடெண்ட் ஃபண்ட், கிராசுவிடி கிடைக்கும்னு தெரியல்லே.''

''பணத்தைப் பத்திக் கவலைப்படாதே. பணச் செலவு ஜாஸ்தி இல்லாம, அதாவது வரதட்சிணை, சீர் அப்படி இப்படின்னெல்லாம் கேக்காத இடமாப் பார்த்து நான் ஏற்பாடு செய்யறேன். அந்த இடம் உனக்குப் பிடிச்சிருக்கணும். அவ்வளவுதான்.''

''ஏதாவது இடம் பார்த்து வெச்சிருக்கியா? நீ பேசறதைப் பார்த்தா ஏதோ ஒரு பையனை உத்தேசிச்சுப் பேசறாப்பலே இருக்கு.''

''யூ ஆர். கரெக்ட். உனக்குத் தெரிஞ்சவன்தான்.''

''அப்படியா? யாரு?''

ராமு சிறிது நேரம் அதற்குப் பதில் சொல்லத் தயங்கினான். ரவியைப் பார்த்துப் புன்முறுவல் செய்தபடியே, ''தெரியலையா?'' என்று கேட்டான்.

ரவிக்கு அவன் யாரைக் குறிப்பிடுகிறான் என்று அநுமானிக்க முடியவில்லை.

''தெரியலையே'' என்றான்.

''ஏன், என்னைப் பார்த்தால் உமாவுக்குத் தகுந்த வரனாகத் தோணலையா?'' என்று ராமு கேட்டதும் ரவியால் வியப்பை வெளிக்காட்டாமல் இருக்க முடியவில்லை.

''நீயா? நிஜமாகவா சொல்றே?''

''இந்த விஷயத்துலே விளையாடுவேனா ரவி?''

''என்மேலே இரக்கப்பட்டுச் செலவில்லாமல் என் தங்கை கல்யாணம் நடக்கட்டும்னு நினைச்சு இந்த முடிவுக்கு வந்தியா?''

''இந்த முடிவுக்கு நான் இன்னிக்கு வரலே. ரவி, என்னிக்கோ வந்தாச்சு. ஆனா இன்னிக்குத்தான் உங்கிட்டச் சொல்றேன்.''

''அதுதானே எனக்கும் ஆச்சரியமாயிருக்கு. உங்க வீட்டுலே இதுக்கு ஒத்துப்பாங்களா?''

ரவிக்கு இந்தச் சந்தேகம் ஏற்பட்டது நியாயமானதுதான். ஏனென்றால் ராமுவின் குடும்பம் பணக்காரக் குடும்பம். அண்ணன் தம்பி நான்கு பேர் இருந்தாலும் ஒவ்வொருவருக்கும் லட்சம் ரூபாய்க்கு மேல் தேறும்படியான ஆஸ்தி இருந்தது. ராமுவின் தகப்பனார் பிரபல வக்கீல். இரண்டு கைகளாலும் வாரி வாரிச் சம்பாதித்தார். எழுபது வயதான இன்றைக்கும் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார். மயிலாப்பூரில் மூன்று வீடுகள். தஞ்சாவூரில் ஒரு வீடு, நிலம் என்று சொத்துக்கள் ஏராளமாக இருந்தன. ராமுவுக்குச் சகோதரிகள் கிடையாது. எனவே பெண்களின் கல்யாணத்துக்கென்று அவன் தகப்பனார் செலவழிக்க வேண்டிய தேவையும் இல்லாமற் போயிற்று. அதோடு மட்டுமல்ல, ராமுவின் அண்ணன்மார்கள் இரண்டு பேர் பெரிய பதவியில் இருந்தார்கள். ஒருவர் ரிசர்வ் பாங்கில் ''டாப் மானேஜ்மெண்ட்'' என்று சொல்லக் கூடிய பதவிகளில் ஒன்றான எக்ஸிக்யூடிவ் டைரக்டராகவும் இன்னொருவர் ரயில்வேயில் போர்ட் மெம்பராகவும் இருந்தார். ராமுவுக்குத்தான் சாதாரணமான வேலை. ஆனால் அவனுக்கும் எந்த நிமிஷத்திலும் ரிசர்வ் பாங்கில் இருக்கும் அவன் தமையனார் மூலமாக ரிசர்வ் பாங்கிலோ அல்லது இதே பாங்கிலோ பெரிய உத்தியோகம் கிடைக்கலாம். ஆகவே அந்தஸ்து என்று பார்த்தால் தங்கள் குடும்பத்துக்கும் ராமுவின் குடும்பத்துக்கும் பெரிய இடைவெளி இருந்தது. அதனால்தான் ரவிக்கு ராமுவின் தீர்மானம் வியப்பையும், அவர்கள் வீட்டில் இதற்கு ஒத்துக்கொள்வார்களா என்கிற சந்தேகத்தையும் ஏற்படுத்தியது.

''எங்கம்மா கிட்ட மாத்திரம்தான் நான் சொல்லியிருக்கேன். அவங்களுக்கு இஷ்டம்தான். மத்தவங்களைப் பத்தி எனக்குக் கவலை இல்லே. யார் ஒத்துண்டாலும் ஒத்துக்கா விட்டாலும் இந்த விஷயத்திலே என் இஷ்டப்படிதான் நான் நடந்துப்பேன்'' என்றான் ராமு.

உமா அதிர்ஷ்டசாலியாகத்தான் இருக்க வேண்டும் என்று ரவி நினைத்துக் கொண்டான்.

ஒரு நாள், என் மகள்
டாக்டர் ஆவாள்

## அந்த ஒரு நாள் இன்றே தொடங்கட்டும்
## ஸ்டேட் பாங்குக்கு இப்போதே விஜயம் செய்யுங்கள்.

ஒவ்வொரு பெற்றோரும் கனவு காண்பது தங்கள் அருமைக் குழந்தையின் வளமான வருங்காலத்தைப் பற்றித்தான். ஆனால் காலம் எவ்வளவு வேகமாகப் பறக்கிறது, நாளை என்பது எவ்வளவு சீக்கிரம் வந்து விடுகிறது என்பது பற்றி எந்தப் பெற்றோரும் நினைத்துப் பார்ப்பதில்லை. தொலை நோக்கும் திட்டமும் இல்லாத காரணத்தால் நமது கனவுகள் பெரும்பாலும் தூள் தூளாக சிதறிவிடுகின்றன.

ஸ்டேட் பாங்கில், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கனவும் நிறைவேற உதவும் திட்டங்கள் எங்களிடம் உள்ளன. ரீ இன்வெஸ்ட்மெண்ட பிளான் (மறு முதலீட்டுத் திட்டம்) ரெக்கரிங் டெபாசிட் ஸ்கீம் (தொடர் வைப்பு நிதித்திட்டம்) சேவிங்க்ஸ் அக்கவுண்ட் (சேமிப்புக் கணக்கு) டெர்ம் டெபாசிட் (தவணை டெபாசிட்) ஜனதா டெபாசிட், மைனர்ஸ் அக்கவுண்ட், மற்றும் பெரென்னியல் பென்ஷன் பிளான் (நிரந்தரப் பென்ஷன் திட்டம்) போன்ற பல திட்டங்களிலிருந்து உங்களுக்குப் பிடித்ததைத் தேர்ந்தெடுங்கள்.

சேமிப்பதற்கு



**ஸ்டேட் பாங்க்**

இந்தியாவின் மிகப்பெரிய பாங்க்

CHAITRA-SBI-628 TAM

''இந்த முடிவுக்கு என்னிக்கோ வந்தாச்சுங்கறயே? இத்தனை நாள் வரையிலும் இதைப் பத்தி எப்படிப் பேசாம இருந்தே?''

''உமாவுக்கு இதிலே இஷ்டம் இருக்குமோ இல்லியோங்கற சந்தேகம் இருந்ததுனுலே நான் இதைப் பத்திப் பேசலே.''

''உமா கிட்டக் கூட நீ இதைப் பத்திப் பேசல்லேயா?''

''உங்ககிட்டத்தான் முதல் முதல்லெ சொல்றேன். நீதான் அவ மனசைத் தெரிஞ்சுண்டு எனக்குச் சொல்லணும்.''

''இன்னிக்கே அவளண்டை பேசறேன்.''

''தாங்க்யூ.''

மேற்கொண்டு அவர்கள் இந்த விஷயத்தைப் பற்றிப் பேச முடியாதபடி சாலையில் போக்கு வரத்து நெரிசலில் இருவரும் சிறிது விலகிப் போக வேண்டி யிருந்தது. பிறகு பேச்சு வேறு விஷயங்களில் திரும்பி விட்டது.

அன்று இரவு ரவி முதலில் தன் தாயாரிடத்தில்தான் விஷயத்தைச் சொன்னன். அவன் அதைச் சொல்வதற்காகவே காத்திருந்தவள் போல ஜானகியும் அவனிடம் அதே பேச்சைப் பேசவிருந்ததாகச் சொன்னுள்.

தாயார் சொன்ன சமாசாரம் அவன் வியப்பை மேலும் அதிகப்படுத்தியது. ஜானகியைப் பார்ப்பதற்காக அன்று பிற்பகலில் ராமுவின் தாயார் வந்திருந்தாளாம். உமாவை ராமுவுக்குக் கொடுக்க முடியுமா என்று கேட்பதற்காகத்தான் அவள் வந்திருந்தாளாம். ராமுவுக்கு அவர்கள் உறவிலேயே ஒரு பெண் இருப்பதாகவும், பெரிய இடம் என்றும், சொத்து ஏராளமாக இருப்பதாகவும் அந்தப் பெண்ணைத்தான் ராமுவுக்குக் கொள்ள வேண்டும் என்று அவர்கள் எல்லோருக்கும் அபிப்பிராயம் இருந்தாலும் ராமு ஒரே பிடிவாதமாக 'நான் கல்யாணம் செஞ்சுக்கறதா யிருந்தால் உமாவைத்தான் செஞ்சுப்பேன். இல்லாட்டா இப்படியே பிரம்மச்சாரியாவேதான் இருப்பேன்'னு பிடிவாதம் செய்வதாகவும் சொன்னுளாம். ராமு நாலைந்து நாளாகவே அவன் தாயாரை நச்சரித்துக் கொண்டிருக்கிறுனும். ரவியின். தாயாரைப் போய்ப் பார்த்து அவர்கள் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டு வரும்படி.

''நீ என்ன சொன்னே?'' என்று ரவி தாயாரைக் கேட்டான்.

''நான் என்ன சொல்ல முடியும்? உமாவைக் கேட்காம, உன்னைக் கேட்காம நான் எப்படிப் பதில் சொல்ல முடியும்?''

''உமா வீட்டிலே இருக்கலேயா?''

''இல்லே.''

''வந்தப்புறம் அவளைக் கேட்டியா?''

''இல்லே. உன் அபிப்பிராயத்தைத் தெரிஞ்சுண்டு அப்புறம் அவகிட்டப் பேசலாம்னு தான் இதுவரை ஒண்ணும் அவளைக் கேக்கலே.''

''உன் அபிப்பிராயம் என்ன?''

''எனக்கு இஷ்டம்தான். இது நடந்தா உமா அதிர்ஷ்டசாலின்னுதான் எனக்குத் தோண்றது.''

''எனக்கும் அப்படித்தாம்மா தோணித்து. இந்த ராமு இப்படி ஒரு ஆசையை மனசுலெ வெச்சுண்டு எப்படி இத்தனை நாள் வரைக்கும் கொஞ்சம் கூட அதை வெளியிலே காட்டிக்காம இருந்தாங்கறதை நினைச்சாத்தான் ஆச்சரியமா இருக்கு.''

''நீ சொல்றது வாஸ்தவம்தான். ஒரு நாள்கூட உமாவோட அளவுக்கு மீறிப் பேசினதோ, பல்லை இளிச்சிண்டு அசடு வழிஞ்சதோ ஒண்ணுமே செஞ்சதில்லேயே. ரொம்ப நல்ல பிள்ளை.''

''உமா மனசுலெ என்ன இருக்கோ? அவளுக்கு இவனைப் பிடிக்கணுமே? அவளோட அழகைப் பார்த்தா ராமு அவளுக்குப் பொருத்தம்னு சொல்ல முடியாது, இல்லியா?''

''ஏண்டா அவனுக்கென்ன குறைச்சல்? கறுப்பா இருக்கான். அவ்வளவுதானே? அவலட்சணமாவா இருக்கான்? உமாவோட உயரத்துக்கு வருவானு? இல்லே கொஞ்சம் அவளை விடக் குள்ளமா இருப்பானுங்கறதுதான் எனக்குச் சந்தேகம்'' என்றுள் ஜானகி.

''சரி, எதுக்கு நாம் ரெண்டு பேருமே பேசிண்டிருக்கணும்? அவளையே கேட்டுட்டால் போச்சு. நீ கேக்கறயா, நான் கேட்கட்டுமா?''

''ரெண்டு பேருமே சேர்ந்து கேப்பமே. அவளையே கூப்பிட்டாப் போச்சு'' என்று கூறி ஜானகி உமாவைக் கூப்பிடச் சென்றுள்.

---

'பொருத்தமற்ற காட்சி''

## அவன் அவள் அது

மருத்துவமனையில் மேனகாவுக்குக் குழந்தை பிறக்கும் போது ராமநாதன் அங்கு வருவதைப் பார்த்து அவர்களுக்குள் ஏற்பட்டிருந்த தொடர்பை அறிந்த லாவண்யா நேராகக் கடலலைகளுக்கு நடுவே நடந்து செல்கிறுள், பிறகு, அடுத்த காட்சியில் தாயை இழந்த குழந்தையைக் கவனிக்க ஆயாவாக வருகிறுள். எதற்காகக் கடலைக் காட்ட வேண்டும்? தற்கொலை முயற்சி என்றுல் அந்த எண்ணத்தை லாவண்யா எப்படி மாற்றிக் கொள்கிறுள்? தொடர்பில்லாமல் இருக்கிறதே?

ஈரோடு கே. எஸ். எஸ். நாராயணன்



தற்கொலை செய்துகொள்ளத்தான் அவள் கடலைத் தேடிப் போனுள். ஆனுல் தற்கொலை செய்துகொள்ள நினைக்கும் அத்தனை பேராலும் அது முடிகிறதா? நெஞ்சில் கைவைத்து நாராயணன் சொல்லட்டும், எத்தனை விஷயங்களில் நம்மை நாம் தானி கட்டியவர்கள் மன்னிக்கிறுர்கள். லாவண்யாவும் ராமநாதனை மன்னித்து விட்டாள். இதற்கு மேலும் வியாக்யானம் தேவையா?.

—விக



சோலைமலை
பாகப் பிரிவினை

கே. ஜே. மகாதேவன்
ராஜீ என் கண்மணி

உமாவோடு உஷாவும் சேர்ந்து வந்தாள். 'ரவி உன்னோடே என்னமோ பேசணுமாம்' என்று கூறி ஜானகி உமாவை அழைத்த போது, ''அதென்னம்மா ரகசியம்? நான் வரக்கூடாதா?'' என்று உஷா கேட்டாளாம். 'ரகசியம் ஒண்ணும் இல்லேடி. இன்னிக்கு அவனோட பேசறதை நாளைக்கு உன்னோடேயும் பேச வேண்டியதுதான். நீயும் வாயேன்' என்று கூறி ஜானகி அவளையும் அழைத்து வந்தாள்.

உமாவுக்கும் உஷாவுக்கும் எதைப் பற்றி அண்ணா கேட்கப் போகிறான் என்று ஒரே ஆவல் கொஞ்சம் பயமும் கூட. ஆனாலும் ஜானகியின் மலர்ந்த முக பாவத்திலிருந்து பேச்சு நல்ல விஷயமாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டார்கள்.

''என்னண்ணா?'' என்று கேட்டாள் உமா.

''நல்ல சமாசாரம் தான் அம்மா. உன் கல்யாண விஷயமாப் பேசலாம்னு'' என்று கூறி ரவி முறுவலித்தான்.

அவன் எதிர்பார்த்தபடி உமா பதிலுக்குப் புன்னகை புரியவில்லை. அதற்கு மாறாக அவள் முகத்தில் ஒரு கலக்கம் படர்வதை அவன் கண்டான்.

''உனக்கு ஒரு வரன் வந்திருக்கு. நல்ல இடம். அந்தஸ்தான குடும்பம்.''

''இப்ப எதுக்கு அண்ணா கல்யாணம்? யாருக்குமே மனசுலே இருக்கிற துக்கமே இன்னும் மறையல்லே.''

''அது உண்மைதான் உமா. ஆனா இந்த வருஷத்துக்குள்ளேயே கல்யாணம் பண்ணினா அந்த கன்யாதானப் பலன் அப்பாவுக்குக் கிடைக்கும்னு சொல்றா'' என்று ராமு தன்னிடம் கூறியதை ரவி திருப்பிச் சொன்னான்.

''இருந்தாலும் இவ்வளவு சீக்கிரம் வேண்டாமே? மனசுலே சந்தோஷம் இல்லாம எப்படி இந்தச் சுப காரியத்தைச் செய்ய முடியும்? ஆறு மாசமாவது போகட்டுமே?''

''ஆகட்டும் உமா கல்யாணத்தை இப்பவே வெச்சுக்கணும்னு இல்லே. இப்பப் பேசி முடிவு பண்ணிட்டம்னா, கல்யாணத்தை அப்புறமா மூணு மாசமோ, நாலு மாசமோ கழிச்சு வெச்சுண்டாப் போச்சு'' என்றாள் ஜானகி.

உமா அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் ஏதோ யோசனையில் இருந்தாள்.

''ராமுவுக்குத்தான் உன்னைக் கொடுக்கறதுன்னு நானும் அம்மாவும் முடிவு பண்ணிருக்கோம் உமா. ராமுவே வாய் திறந்து கேட்டான். என்னை. அவங்க அம்மாவும் வந்து நம்ம அம்மாவைக் கேட்டிருக்கார். ராமுவுக்கு ரொம்ப நாளாவே உன்னைக் கல்யாணம் பண்ணிக்கணும்கிற அபிப்பிராயம் இருந்திண்டிருக்கு. அழுக்கலா பேசாம இருந்திருக்கான். நீ என்ன சொல்றே, உன் அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டு ரவி ஆவலுடன் உமாவின் முகத்தைப் பார்த்தான். அவனுக்கு ஏமாற்றமாக இருந்தது உமாவின் முகத்தில் மகிழ்ச்சி தோன்றவில்லை.

''என்னடி உமா? உனக்கு இஷ்டமில்லையா?'' என்று ஜானகி கேட்டாள்.

''என்னை 'கம்பெல்' பண்ணிக் கேக்காதிங்க ஒருத்தரும்'' என்று உமா உறுதியோடு சொன்னாள்.

''இப்படிச் சொன்னா எப்படி உமா? நாங்க எவ்வளவு ஆசையாக கேக்கறோம். உன் நல்லதுக்காகத்தானே சொல்றோம்'' என்றான் ரவி.

''என் நன்மையை நீங்க விரும்பறதானா, இந்தக் கல்யாணப் பேச்சை இத்தோட விட்டுடுங்கோ. எனக்கு இதிலே இஷ்டமில்லே''

''ராமுவைப் பண்ணிக்கறதுலே இஷ்டமில்லையா, இல்லே கல்யாணமே இப்போதைக்கு யாரோடயும்வேண்டாங்கறயா'' —ஜானகி

''ரெண்டுமேதான் அம்மா''

''ஏன் உமா? ராமுவைப் பிடிக்கல்லையா? அவன் உனக்குப் பொருத்தமானவன் இல்லேன்னு நினைச்சிறியா?''

''அப்படி நான் சொல்லலே. அவன் ரொம்ப நல்லவன். அவனைக் கல்யாணம் பண்ணிக்கிற எந்தப் பெண்ணும் சந்தோஷமா இருப்பா. அதிர்ஷ்டசாலிதான் அவ. ஆனா நான் அவரைப் பண்ணிக்க முடியாது. ப்ளீஸ் எக்ஸ்யூஸ் மீ.''

''ஏன் உமா? ஏன்?''

''நான் கல்யாணம் பண்ணிக்கணும்னு நினைக்கிறப்ப அதுக்குக் காரணத்தைச் சொல்றேன்.''

''வேற யாராவது உன்னோடே மனசுலே இருக்கானா?'' — ஜானகி கேட்டாள்.

---

''பொருத்தமற்ற காட்சி''

## பூட்டாத பூட்டுக்கள்!

''உப்பிலி தன் மனைவியைத் தேடிப் பணத்துடன் படகில் செல்லும்போது சண்டை நடப்பதும், பணம் நீரில் மூழ்கி மறைந்து விடுவதும்'' படத்திற்குத் தேவையானதா?

மதுரை

நா. இராமகிருஷ்ணன்

குழந்தை வேண்டும் என்று கன்னியம்மா ஏங்குவது அவசியம்தானா என்று கேட்டால் நான் என்ன பதில் சொல்ல முடியும்? வேலைக்காரியின் கணவனைக் குருடனாகக் காட்டுகிறீர்களே அது அவசியம்தானா என்று கேட்டால் என்ன பதில் தர முடியும்?

—மகேந்திரன்





ஏ. எஸ். ஏ. சாமி
துளி விஷம்

எம்.எம்.ஏ. சின்னப்பா தேவர்
ஆட்டுக்கார அலமேலு

''இப்படி யெல்லாம் என் வாயைப் பிடுங்கிறு என் மனசுக்கு ரொம்பக் கஷ்டமா இருக்கு அம்மா.''

''உன் மனசைக் கஷ்டப்படுத்தணும்னுடி இதை யெல்லாம் கேக்கறோம்? நம்ம நிலைமையையும் கொஞ்சம் யோசிக்கணும். ராமு வரதட்சிணை வேண்டாம், சீர் வேண்டாம், ஒண்ணும் வேண்டாம்னு சொல்றாணும். கல்யாணச் செலவு மட்டும்தான். இந்த மாதிரி யார் இருப்பா இந்தக் காலத்துலே?'' என்று ஜானகி சொன்னாள்.

''அம்மா, இதுதான் உங்களுக்கு முக்கியமானதா யிருந்தா நான் நினைச்சுண்டிருக்கறவர் கல்யாணச் செலவு கூட இல்லாமல், ரிஜிஸ்டர் மேரேஜ் செஞ்சுக்கவும் தயாரா யிருக்கார்'' என்று உமா சொன்னதும், அங்கிருந்த மூவருமே ஆச்சரியமடைந்தார்கள்.

அப்படியானால் உமாவுக்கு ஒரு காதலன் இருக்கிறான் என்றல்லவா ஆயிற்று?

சில விநாடிகளுக்கு ஒருவருக்கும் ஒன்றுமே பேசத் தோன்றவில்லை.

ரவிதான் அந்த மௌனத்தைக் கலைத்தான்.

''சரி உமா! உன் இஷ்டம் தெரிஞ்சு போச்சு. இனி நான் உன்னை வற்புறுத்த மாட்டேன். ராமு கிட்ட விஷயம் இந்த மாதிரின்னு சொல்லிடறேன். ஆனா நீ மனசிலே வெச்சிண்டிருக்கறவன் யாரு, என்னங்கறதை யெல்லாம் எங்களுக்குச் சொல்லிட்டு, எங்க சம்மதத்தையும் வாங்கிண்டு அப்புறம் ரிஜிஸ்டர் கல்யாணமோ, மாலை மாத்திக்கிற கல்யாணமோ எதை வேணாலும் செஞ்சிக்கம்மா'' என்று வருத்தத்துடன் சொன்னான்.

''ஐ எம் ஸாரி அண்ணா. உன் மனசை ரொம்பப் புண்படுத்திட்டேன். ஆனா நீங்க ரெண்டு பேரும் இவ்வளவு தூரம் என்னை வாயைக் கிளறியிருக்காட்டா நான் இதைச் சொல்லி யிருக்கவே மாட்டேன். ஆனா ஒண்ணு மட்டும் சொல்றேன் அண்ணா. அவரை 'லவ்' பண்றதுதான் உங்களுக்கெல்லாம் தெரியாமல் செஞ்சேனே ஒழிய வேறு எதுவும் உங்களுக்குத் தெரியாமல் நடக்காது. சமயம் வரும்போது அவரை உங்களுக்கு இன்ட்ரட்யூஸ் பண்ணி வைக்கிறேன். உங்க ரெண்டு பேர் சம்மதம் இருந்தாத்தான் அவரைக் கல்யாணம் பண்ணிப்பேன். இதை நீங்க நம்பலாம்'' என்றாள் உமா.

''நீயும் அமுக்கல் ஆசாமியாத்தான் இருந்திருக்கே!'' என்றாள் ஜானகி.

''ராமுவுக்குத்தான் ரொம்ப 'டிஸப்பாயின்ட்மெண்டா'யிருக்கும்'' என்றான் ரவி.

இவைகளை யெல்லாம் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் இருந்த உஷாவின் மனத்தில் சிந்தனை இவ்வாறு ஓடியது: ''உமாவை அமுக்கல் ஆசாமி என்று அம்மா சொல்கிறாள். எப்படியோ அவளுடைய ரகசியத்தை வெளியிட உமாவுக்குச் சந்தர்ப்பம் கிடைத்து விட்டது. நாளைக்கோ, மறு நாளைக்கோ நம் விஷயம் தெரிந்தால் என்ன சொல்வாளோ அம்மா! அண்ணாவும் உமாவும் தன்னைப் பற்றி என்ன நினைப்பார்களோ? அதற்குச் சந்தர்ப்பம் எப்போது வரப் போகிறதோ!''

இந்தப் பேச்சுக்களெல்லாம் நடந்தது சமையலறையில். ஒரு வகையாக மேற்கொண்டு யாரும் ஒன்றும் பேச முடியாதபடி நிலைமை உருவானதும் ரவி அங்கிருந்து எழுந்து சென்று விட்டான். ஜானகியும் ஏதோ சமையலறைக் காரியங்களில் ஈடுபட்டாள்.

உஷா உமாவைப் பார்த்துப் புன்னகைத்தாள். உமாவும் பதிலுக்குப் புன்னகை செய்தாள். உஷாவின் புன்னகையில் வழக்கமான சகோதர பாசத்தோடு கூட உமாவின் காதலைப் புரிந்துகொண்ட நட்பின் பாவமும் இருந்தது. உமாவின் புன்னகையில் சிறிது வெட்கமும், தான் இவ்வளவு நாட்களும் இந்த விஷயத்தை இவ்வளவு ரகசியமாக வைத்திருந்ததற்காக ஒரு குற்ற உணர்ச்சியும் கலந்திருந்தன. ''வா, அக்கா. உன்னோடே எனக்கு நிறையப் பேச வேண்டியிருக்கு'' என்று கூப்பிட்டபடியே எழுந்தாள் உஷா. உமாவும் எழுந்தாள். (தொடரும்)

---

''பொருத்தமற்ற காட்சி''

## பூட்டாத பூட்டுக்கள்!

கடைசிக் காட்சியில் கதாநாயகன் தனக்கு மனைவி துரோகம் பண்ணிய போதும் அவள் மீது அதிக அளவு அன்பு வைத்து அவளைப் பிரிந்து வாழ முடியாததால் அவளுடன் செல்கிறான். உள்ளத்தை நெகிழ வைக்கும் இக்காட்சியைக் காட்டிய பின் ''நாய்க்குச் சோறு இடுவது போல்'' காட்டியது சற்றும் பொருத்தம் இல்லை என்று நான் எண்ணுகிறேன்.

நாகர்கோவில் டி. ராஜி

கணவன் மனைவி புறப்பட்டுப் போவதற்கும் அந்த மன நோயாளி நாய்க்குச் சோறு போடுவதாகக் காட்டுவதற்கும் எந்தவித உள் நோக்கமும் கிடையாது. பிறகு நீங்கள் ஏன் பொருத்தம் பார்க்கிறீர்கள்? காலியாகக் கிடக்கும் மக்கடையை உப்பிலியின் வண்டி கடந்து செல்லும்போது ஏற்படும் சதங்கைச் சத்தத்தை அந்தக் காட்சியில் கொடுத்திருக்கிறேன். அவ்வளவுதான்.

—மகேந்திரன்



# இன்னொரு அம்மா

சுந்தரராஜன்

"மது, இப்ப நான் சொல்லறதைக் கேளு. அப்பாவுக்கு உடம்பு சரியில்லே. அப்பா லேட்டாத்தான் சாப்பிடுவார். நீதான் சமத்தாச்சே, சீக்கிரம் சாப்பிட்டுப் போய்ப் படுத்துக்கோ."

"பாட்டி, எனக்கு எப்பவும் அம்மாதான் சாதம் போடுவா; அப்பாவும் என்கூடத்தான் இருப்பார். அப்பா இல்லேன்னு, அம்மாவே உக்காருவா. ஒண்ணு அம்மாவைக் கூட்டிண்டு வா, இல்லேன்னு அப்பா வரணும்."

ராஜம் தன் நாலரை வயதுப் பேரனைத் தூக்கிச் சாப்பாட்டு மேஜையின் மேல் வைத்தாள்.

"மது, என்னே ஏண்டா படுத்தறே:"

"உன்னே யாரு பாட்டி படுத்தறா? நீதான் சமத்தாச்சே. என்னைக் கஷ்டப்படுத்தாமப் போய்ப் படு. அப்பா வரச்சே, நானும் சாப்பிடுவேனும்."

ராஜத்துக்கு மதுவின் புத்திசாலித்தனத்தின் மேல் கொஞ்சம் கோபம் வந்தது.

"மது, குழந்தையா லட்சணமா இரு. தாத்தாவை வேணா உன் கூட உக்காரச் சொல்லவா? உங்கம்மாவைக் கூட்டிண்டு வான்னு, நான் என்ன பண்றது? கடங்காரி, இந்த மாதிரி பிள்ளையைப் பெத்துப் போட்டுட்டுப் போக எப்படித்தான் மனசு வந்ததோ?"

"ஏன் பாட்டி, என்னைப் பத்தியே கவலைப் படறயே, எங்கப்பா சாப்பிட வேணுமா? தாத்தா வேணும்னு எங்கப்பா பக்கத்திலே உக்காரட்டும். எனக்கு எங்கப்பாதான் வேணும்."

ராஜம் மதுவைப் பார்த்தாள். தாயில்லாக் குழந்தை எனத் தெரிந்தது. முகத்தில் ஒரு சோகப் பரவியிருந்த கேசம், களைப்பு, தவிப்பு, 'தனியாகி விட்டேன்' என்ற பயம் எல்லாம் இருந்தன. அவள் மதுவைத் தன் தோள்களில் சாய்த்துக் கொண்டாள்.

"மது, உனக்கு என்னடா புரிய வைப்பேன்? அவன் என்னடான்னு உன்னே ஏறெடுத்தே பார்க்க மாட்டேங்கறான். நீ என்னடான்னு அவன்தான் வேணும்னு என் உயிரை வாங்கறே. அந்த நாசமாப் போற அநகாதான் காரணம். செத்தவநான்போனைப் புறம் போகக் கூடாதா? உன்னை எங்கிட்ட விட்டுட்டு, ஏன் போனா?"

"பாட்டி எங்க அம்மாவையா திட்டறே?"









மு. கருணாநிதி — பராசக்தி

ஏ. வி. மெய்யப்பன் — சபாபதி

''பின்னே என்னடா? நீதான் என் உயிரை வாங்கறயே?''

''பாட்டி, சாதம் போடு. நான் சாப்பிட்டால் அம்மாவைத் திட்ட மாட்டாயோன்னோ?''

''மது, நீ இப்படி இருந்தாத்தான் எல்லாரும் உன்னையும், அம்மாவையும் பத்தி உசத்தியாப் பேசுவா. இல்லேன்னு, அவனைத்தான் திட்டுவா.''

''பாட்டி, அம்மாவைப் பத்தி உசத்தியாப் பேசேன்.''

ராஜம் சோற்றைப் பிசைந்து கொண்டே பேசினாள்: ''அநகா ரொம்பச் சமத்தாம். மதுவும் ரொம்பச் சமத்தாம்....''

''அப்பா, உனக்கு சூரியனோட வண்டியை யார் ஓட்டறா தெரியுமா?''

''மது, சாப்பிடறச்சே பேசாதேன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன். சூரியனோட வண்டியை யார் ஓட்டினால் உனக்கு என்ன?''

மதுவின் முகம் கூம்பியது.

''ரமணா, உனக்கு என்னடா இருக்கா? அவ போயிட்டாங்கறதுனால, இவன் என்னடா பண்ணுவான்? உனக்காக இவன் ஏங்கறதைத் தினம் தினம் பார்த்து....''

''அம்மா! எனக்கென்னமோ இவனைப் பிடிக்காமலேயே போயிடுத்து. என்னை என்ன பண்ணச் சொல்றே?''

ராஜம் நிலைகுலைந்து போனாள். ''சரி, சரி, அவனை முன்னாலும் வச்சண்டு பேசாதே.''

ராஜம் தனக்குள் ஒரு தீர்மானத்துக்கு வந்தாள்: 'இவனுக்கு இன்னொரு கல்யாணம் செய்து வைத்தால், வருபவளாவது மதுவைக் கவனித்துக் கொள்ள மாட்டாளா?' அனகாவுக்கு மது பிறந்ததிலிருந்தே உடம்பு தேறவேயில்லை. படிப்படியாக அவள் ஆரோக்கியம் கெட்டும், கடைசியில் வாழ்க்கையே முடிந்து விட்டது. அதனால் ரமணனுக்கு மது பேரில் ஓர் அர்த்தமற்ற, இயற்கையை மீறிய வெறுப்புத் தட்டிவிட்டது.

அனகாவைத்தான் இழக்க மதுதான் காரணம் என்று உள் மனத்தின் ஓர் அசட்டு எண்ணத்தின் வெளிப்பாட்டு அந்த வெறுப்பு. புதிதாக வருபவளாவது அனாதை போலிருக்கும் மதுவுக்கு தாய்ப் பாசத்தை அளிக்கலாம் அல்லவா? நல்ல குணவதியாகத் தேடிப்பிடித்தால் போகிறது' என்று எண்ணினாள் ராஜம். ''மது, உனக்குத் தெரியுமோ? உனக்கு அம்மா வரப் போறாளாக்கும்.''

மது உடனே நிமிர்ந்து பார்த்தான். கண்களில் பரவசம் எங்கிருந்தோ வந்து உட்கார்ந்து கொண்டது. அதற்கப்புறம் அவன் தலை முன்போலக் குனிந்து கொண்டது. ராஜம் திகைத்துப் போய் விட்டாள்.

''போ பாட்டி, நீ பொய் சொல்றே. எங்கம்மாதான் திரும்பி வர முடியாத இடத்துக்குப் போனதா தாத்தா சொன்னாரே.''

''அம்மான்னு அநகா இல்லேடா மது!''

''வேற யாரு அம்மாவா இருக்க முடியும்?''

ராஜம் யோசித்தாள்.

''நான் சொல்றேன்டா, மது.''

மது குரலைக் கேட்டு வியந்து போனான். அப்பாவின் குரல்.

ரமணன் மதுவின் அருகில் வந்தான். ராஜம் நின்றவாறே, அன்பு நதிகள் இணையும் காட்சிக்காகக் காத்திருந்தாள்.

''மது, உனக்கு ஒரு அம்மா வரப் போறாடா.''

''எப்படி முடியும்? அம்மா இல்லையே?''

''அம்மான்னு அந்த அம்மா இல்லேடா. உங்கம்மாவுக்குப் பதிலா, அம்மா மாதிரியே இன்னொரு அம்மா.''

மது மௌனமாக யோசிப்பது, ரமணனுக்கு உற்சாகத்தை ஊட்டியது. 'அம்மா பயந்த மாதிரி, இவன் ப்ராப்ளமாக இருக்க மாட்டான்.' என எண்ணிக் கொண்டான்.

''மது, இந்தம்மா அழகா இருப்பாடா.''

''என் அம்மாவை விடவா?''

''ஆமாண்டா.''

''அப்புறம்?''

''தினம் உனக்குச் சாதம் போடுவா. உன்னை நன்னா டிரஸ் பண்ணி, ஸ்கூலுக்குக் கூட்டிண்டு போவா. சாயந்திரம் உன்னோட வாக் போவா. ராத்திரி உன்னைக் கட்டிண்டு படுத்துப்பா. கதையெல்லாம் சொல்லுவா.''

மதுவின் சிறிய, மெல்லிய புருவங்கள் உயர்ந்தன. ''திரும்மாவா? புது அம்மா இதெல்லாம் செய்வாளா? ஆனா அப்புறம் நம்ம அம்மா கோச்சுக்க மாட்டாளா?''

ரமணனின் குரலில் ஆர்வம் பொங்கியது. ''கோச்சுக்கவே மாட்டாப்பா, அழகா. இப்ப உன்னோட புத்தகம் தொலைஞ்சு போச்சுன்னு, உடனே வேற புத்தகம் வாங்கிண்டே இல்லையா? அதே மாதிரிதான்.''

மது யோசனையில் ஆழ்ந்தான்.

''என்னடா, மது?''

''இல்லேப்பா, ஒரு யோசனை!''

''என்ன யோசனைடா, பெரிய மனுஷா?'' —ராஜம் மதுவின் அருகில் அமர்ந்தாள்.

''இல்லே பாட்டி, அம்மா தொலைஞ்சு போய் விட்டான்னு புது அம்மா வாங்கறோம். ஒரு வேளை அப்பா தொலைஞ்சு போயிருந்தா, எனக்கு நல்லதா புது அப்பா கிடைச்சு இருப்பாரு, இல்லையா?''

ரமணன் உடல் சிலிர்த்தது. சட்டென்று எழுந்து கொண்டான். ராஜம் மதுவை அணைத்துக் கொண்டாள்.

''ரமணா, கனியைக் கல்லாக்க எத்தனை உரம் போட்டிருக்கேடா, பாவி!''

ரமணன் கால்கள் வலுவிழந்து போயின. 'பொத்' எனக் கீழே விழுந்தான்.



# அமைதியின் விலை அரை லட்சம்..

—நித்தி—

[இக்கதை ஆசிரியர் அடையாறு திரைப்படக் கல்லூரியில் டைரக்ஷன் துறை முதலாமாண்டில் இருப்பவர்.]

வில்லன் நான்காவது முறையாகக் கதாநாயகியின் ஜாக்கெட்டைக் கிழிக்க, நான் எழுந்து கொண்டேன்.

என் வரிசையிலிருந்தவர்களின் கால்களை மிதிக்காமல், இடிக்காமல் நகர்ந்தேன்.

அந்த இளம் ஜோடிகள்தான் என்னமாய்ச் சிரித்துப் பேசுகிறார்கள், படத்தைக்கூடக் கவனிக்காமல்?

நாம் இப்படிச் சந்தோஷமாக இருந்து எவ்வளவு காலமாகிறது? எந்த தோஷத்தாலோ சந்தோஷம் நம்மை விட்டுப் பரதேசம் போய்விட்டது..

பெரிதாக மூச்சு விட்டேன்.

வெளியே வந்து டாய்லெட்டை நோக்கி நடந்தேன். இடைவேளையிலேயே முடித்திருக்கலாம்! கவலைகளின் மனத்தில் சிட்டிலேயே கல்லாக இருந்து விட்டேன்.

இடைவேளை முடிந்து அரை மணி இருக்குமா?

டாய்லட்டை அடைந்து கதவைத் திறந்தேன்.... உறைந்தேன்!

அவர் விழுந்து கிடந்தார்!

தலையின் பாதியை நரையும், மீதியை வழுக்கையும் மறைத்திருந்த கோலத்தில் அவர் வயது தெரிந்தது.

மூக்கருகே கையைக் கொண்டு போனேன். மூச்சில்லை! இறந்துவிட்டார்.... ஹார்ட் அட்டாக்?

அவர் இறந்துவிட்டார் என்பது தெரிந்தது. அ....ஆவிற்கு அப்புறம் 'இ'தான் வரும் என்பதுகூடவா தெரியாது?

உடனே மானேஜரிடம் சென்று சொல்ல வேண்டும். பாவம் மனிதர்... என்னைப் போலவே இடைவேளை நெரிசலில் இங்கு வந்து அவதிப்படுவதை விட இப்போது வருவது மேல் என்று இப்போது வந்திருக்கிறார். ஆனால் அவரோடு ஹார்ட் அட்டாக்கும் வந்துவிட, அவர் பிரேதமாகப் படுத்துவிட்டார்.

எழுந்தேன்.

அப்போதுதான் அது என் கண்ணில் பட்டது. அந்தத் தோல் பை... சற்றுத் தள்ளி ஒரு பேஸினுக்குள் அடைக்கலமாகியிருந்தது.

சென்று அதை எடுத்தேன். கனத்தது. விரல்கள் பரபரத்தன. 'ஜிப்' என் வேக இழுப்பில் 'கப்'பென்று விலகியது.

அந்தப் பைக்குள் இருந்தது பணம்...பணக் கட்டுகள். ஐம்பதாயிரம்.... அரை லட்சம்!

அரை லட்சத்தை இவ்வளவு அலட்சியமாக ஒரு தோல் பையில் திணித்து வந்து, இங்கு உயிரை விட்டிருக்கிறார் மனுஷன்!

பணத்தையே பார்த்தேன். என் வாழ்நாளில் நான் இவ்வளவு பணத்தை இப்போது தான் பார்க்கிறேன்.

இதை எடுத்துக் கொண்டு நாம் சென்று விட்டால்... என் மனம் சினிமாவில் காட்டுவது போல் இரண்டாகப் பிளந்து கொண்டு அதில் ஒரு பகுதி இந்தக் கேள்வியைக் கேட்டது.



[illegible] வாசன் — சந்திர லேகா

எம். ஜி. ராமச்சந்திரன் — நாடோடி மன்னன்

''சீ! யாருக்கோ சொந்தமான பணம்! பிறர் பொருளைத் தன் பொருள் போல் பாவிக்கிற உன் பொதுவுடைமைத் தத்துவம் இதில் வேண்டாம்!'' — மற்றொரு பகுதி மனம்.

யோசித்தேன்.

இவ்வளவு அஜாக்கிரதையாக ஒரு சிறு தோல் பையில் தமிழ் நாட்டு லாட்டரியின் முதல் பரிசையே தூக்கி வரும் இவருக்கு இதுபோல் இன்னும் எவ்வளவு சொத்து இருக்குமோ...

யோசித்தேன்.

பணத்தோடு போய்விடவேண்டியதுதான்! ஹார்ட் அட்டாக்கில் போய்விட்ட இவர் தாம் அரை லட்சத்தோடு உயிரை விட்டதாக யாரிடமும் சொல்ல முடியாது!

பணத்தோடு போய்விட வேண்டியதுதான் என்னைப் போல இயற்கை அழைத்து யாரும் வருவதற்கு முன்!

அடங்கியிருந்த அவர் உடலில் இன்னமும் ஓடிக் கொண்டிருந்த ஒரே அம்சம் வலது கையில் இருந்த 'ஒமேகா' கடிகாரம் தான்.

மணியைப் பார்த்தேன். 8—50.

விரைவாக வெளியே வந்தேன்.

திடீரென்று யாராவது எதிர்ப்பட்டு விட்டால்? இதயம் ஏகமாகத் துடித்தது.

நல்லவேளை.... யாரும் எதிர்ப்படவில்லை. தியேட்டர் வாசலை நோக்கி விரைந்தேன்.

வாட்ச்மேன், தன் அரை அங்குல பீடியின் முனையைத் தேடி அதில் நெருப்பைத் திணிப்பதில் ஈடுபட்டிருந்ததனால் என்னைக் கவனிக்கவில்லை.

அப்பாடா... வெளியே வந்துவிட்டேன். நடந்தேன் என்பதை விட ஓடினேன் என்பதே பொருந்தும்.

ஒதுக்குப்புற பகுதியில் நின்று வெறிச்சிட்ட வீதியை ஒரு முறை பார்த்துக்கொண்டேன்.

தோல் பையைத் திறந்து அந்த நோட்டுக் கற்றைகளை எடுத்தேன். என் பனியனுக்குள் அவை அடங்கின.

தோல் பையைப் பக்கத்திலிருந்த குப்பைத் தொட்டியில் வீசி எறிந்தேன்.

வீசி நடந்தேன் கையை! இப்போது நான் அரை லட்சாதிபதி! ஹார்ட் அட்டாக்கை மனமார வாழ்த்திக்கொண்டேன்.

வீடு நெருங்கியது.

வீடா அது! நாலு பக்கம் சுவர் எனப்படும் வஸ்துவால் அடைக்கப்பட்டு, மேலே வானத்தைப் பல துவாரங்களோடு இருந்த கூரையால் மறைக்க முயன்ற கூடாரம்!

கதவை மெல்லத் தட்டினேன்... சற்று வேகமாகத் தட்டினால் கதவு அவ்வளவு தான்.

இந்த நிலையெல்லாம்தான் ஒழியப் போகிறதே!

கோமதி கதவைத் திறந்தாள். மெலிதாகப் புன்னகைத்தாள்.

வறுமையையும், இதய பலவீனத்தையுமே தனக்குத் தன் கணவன் தந்திருக்கிறான் என்ற நிலையிலும் மாறாத அவள் புன்னகை.

அவளைப் பார்த்தேன்.

சேலையின் பல பகுதிகள் என் கிழிந்த லுங்கித் துண்டுகளால் அழகுபடுத்தப்பட்டிருந்தன.... கிழிசலை மறைக்க வேறு வழி?

கோமதி!.... உன்னை விதவிதமான சேலைகளால் அலங்கரித்துப் பார்க்கப் போகிறேன். உன் கழுத்தை நகைகளால் நிரப்பிக் களிக்கப் போகிறேன்.

வீட்டுக்குள் நுழைந்தேன்.

கோமதி சமையலறை எனப்படும் பொந்துக்குள் புகுந்தபடி ''கையலம்பிட்டு வாங்க! சூடா அப்பளத்தைச் சுட்டு வச்சிருக்கேன்!'' என்றாள்.

கையலம்புவதா? கோமதி... இனி நான் பாலில்தானே கையலம்புவேன்!

பைத்தியம் பிடித்தவன் போல் ஐந்து கட்டுக்களையும் பிரித்து நோட்டுக்களை அறையில் இறைத்து நிறைத்தேன்.

''கோமதி! இங்கே வந்து பாரு! நம்ம வறுமை ஒழியப் போற நிலையைப் பாரு! இருநூறு ரூபா சம்பளத்துக்காக ஓடா தேஞ்சு படுற வேதனை...உடம்பைக் கவனிக்க முடியாம நீ படுற வேதனை... இத்தனையையும் போக்கப் போற பணம் பாரு!....''

கோமதி என் கூச்சலைக் கேட்டு ஓடி வந்தாள். நின்றாள்! பார்த்தாள்! பணச் சிதறலைப் பார்த்தாள். கண்கள் விரிய வெறித்துப் பார்த்தாள்.

அப்படியே தரையில் சாய்ந்தாள்.

''கோமதி!''

ஓடினேன்! தலைகுப்புற விழுந்திருந்த அவள் முகத்தைத் திருப்பினேன். மூக்கில் விரலை வைத்தேன். மூச்சில்லை!

அவள் கையைத் தூக்கினேன். விழுந்தது!

அவளையே பார்த்தேன்.

திடீரென்று இவ்வளவு பணத்தைப் பார்த்து அதிர்ச்சியை அவளால் தாங்க முடியவில்லை. இதய பலவீனம் வேறு! ஹார்ட் அட்டாக்கில் உயிர் போய்விட்டது!

ஒரு ஹார்ட் அட்டாக்கில் யாருக்கோ சொந்தமான பணத்தை நான் சொந்தமாக்கிக்கொண்டேன். அதே பணத்தை வைத்தே அதே ஹார்ட் அட்டாக்கில் என் ஒரே சொத்தான கோமதியை ஆண்டவன் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டுவிட்டான்.

ஹார்ட் அட்டாக்கை வாழ்த்தத் தோன்றவில்லை.

கோமதியையும் கொட்டிக் கிடக்கும் நோட்டுக்களையும் மாறி மாறி வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தேன்!

# திரைக்கதை என்றால் என்ன?

**பல்கலைக் கழக மட்டத்தில் முதன் முறையாக டாக்டர் பட்டத்துக்காக இந்திய சினிமா என்ற தலைப்பில் ஆராய்ச்சி நூல் எழுதிக் கொண்டிருப்பவர் பேராசிரியர் ஏ. எஸ். பிரகாசம். அவருடன் ஒரு பேட்டி :**

● நாவலுக்கும் திரைக் கதைக்கும் என்ன வித்தியாசம்?

நாவல் என்பது 'கலை'; திரைக் கதை என்பது விஞ்ஞானத்துடன் இணைந்த கலை. முன்னது கட்டுக்கடங்காத காட்டாறு. பின்னது கரைகளுக்குள் அடங்கி ஓடும் நதி.

● நீங்கள் சொல்வதைப்பார்த்தால் திரைக் கதையில் சிந்தனைச் சுதந்திரம் அதிகமிராது என்று தோன்றுகிறதே? சட்ட திட்டங்களுக் குட்பட்டுத்தான் திரைக் கதை அமைக்க வேண்டுமா?

கம்பீரமாகப் பாயும் காவிரியால் பயனுண்டுதான். ஆனால் அணைகள் கட்டும்போது காவிரியை மேலும் பயனுள்ளதாகச் செய்ய முடிகிறது. கட்டுப்பாடுகள் திரைக் கதையை மேலும் சோபிக்கச் செய்யும்.

● அப்படி என்னென்ன சட்டங்கள் திரைக் கதைக்கு?

பொதுவாக நாவலாசிரியர்கள் கதையில் கதாபாத்திரங்களின் உள்உணர்வுகளைத் தங்களுடைய வார்த்தைகளால் வர்ணித்து வெளியிடுகிறார்கள். அதுவே அந்த கலையின் வலிமையாகிறது. திரைக்கதையாகும்போது பெரும்பாலும் வசனத்திலேயே கதாபாத்திரங்களின் உள்ளுணர்ச்சிகளும் கூறாமல் கூறப்பட்டு விடவேண்டும். வசனம் இயல்பாகவும் அமைய வேண்டும். அல்லது கதாசிரியரின் கருத்தை ஓர் உருவகக் காட்சி மூலம் விளக்க வேண்டும். உதாரணமாக மணியன், கல்யாணி தன் அறையில் நுழைந்தாள். அவளோடு தனிமையும் அந்த அறையில் நுழைந்தது என்றுகூறி அவளது தனிமைத் துன்பத்தைப் பல வரிகளில் விவரிக்கலாம். தனிமையை எப்படிக் காட்சியாக்குவது? இடைக் காட்சி ஒன்றைத் தந்து ஒரு தனித் தீவிலே ஒரு தோணியில் கல்யாணி இறக்கி விடப்படுகிறாள். தோணி போய்விடுகிறது என்று காட்டலாம். ஜன சமுத்திரத்தின் மத்தியிலே அவள் ஒரு தீவாக நின்றாள் என்ற நாவலாசிரியரின் எண்ணம் உருவகக் காட்சியாகிறது.

● நாவலாசிரியரின் கதை சொல்லும் பாதையை விட்டுத் திரைக் கதை ஆசிரியர் விலகத்தான் வேண்டுமா?

பாதை மாறித்தான் ஆக வேண்டும். நாவலுக்கு முடிவு முக்கியம்தான். ஆனால் இடையில் கதாசிரியர் இங்குமங்கும் சஞ்சரிக்கலாம். திரைக் கதையோ முடிவை நோக்கியே தொடங்க வேண்டும். தொடங்கி இடையிலே துவளாமல் தொடர்ந்து ஓடி முடிய வேண்டும். தென்றலாகத் துவங்கிப் புயலாக முடிய வேண்டும்.

● சில ஹாலிவுட் திரைப் படங்கள் எடுத்த எடுப்பிலேயே திரில்லாகத் தொடங்குகின்றனவே!

திரைக் கதையில் பல வகை உண்டு. திரில்லர்களுக்குத் தொடக்கமே புயலாக இருக்க வேண்டும். ஓட்டப் பந்தயங்களில் நூறு மீட்டர் ஓட்டம், எண்ணூறு மீட்டர் எல்லாம் உண்டு. முன்னதற்குத் தொடக்கத்திலேயே விரைவு வேண்டும். பின்னதற்கு மெதுவாகத் தொடங்கி முடிவு நெருங்கும் போது விரைவு வேண்டும்.

● திரைக் கதை என்ற பெயரால் மூலக் கதையை நிறைய மாற்றுகிறார்களே? அது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

மூலக் கதை என்பது சிலுசிலுவென ஓடும் சிற்றோடையிலே சலசலவெனச் சதிராடும் மீன் போன்றது. அதைப் பார்ப்பது ஒரு ரசனை. சமைத்துச் சாப்பிடுவது வேறு ஒரு ரசனை. அதனுடைய செதில்களை விலக்குகிறோம். வெட்டித் துண்டு துண்டாக்கி இடையிலே மசாலாக்கள் வைத்து உலையிலே கொதிக்க விடுகிறோம். நல்ல சமையல்காரன் விருந்தால் சப்புக் கொட்டித்தானே சாப்பிடுவீர்கள்!

● நீங்கள் ஏதாவது புதுமையாகச் செய்தால் தமிழ்த் திரை ரசிகர்கள் வரவேற்பைத் தருகிறார்களா இல்லையா?

தமிழ்த் திரை ரசிகர்களிடம் ஒரு விசித்

ஏ.எஸ்.பிரகாசம்





திர ரசனைப் போக்கு நிலவுகிறது. திரையில் வரும் நிகழ்ச்சிகளை அவர்களால் முன் கூட்டியே யூகிக்க முடிந்தால் ரசிப்பதில்லை. அவர்களால் முற்றிலும் யூகிக்க முடியாத நிகழ்ச்சிகள் வந்தாலும் ரசிப்பதில்லை. திரைக் கதை ஆசிரியர் ரசிகர்களின் கைக்கெட்டிய தூரத்தில் ஓடிக் கொண்டிருக்க வேண்டும். ஆனால் பிடிபட்டு விடக் கூடாது!

● ஏற்கெனவே ஒரு மொழியில் வந்த படத்தை வேறு மொழிக்கு மாற்றும்போது கதையையும் மாற்றுகிறீர்களா?

ஆம்! ஹிந்தியில் வெளிவந்த 'குட்டி' தமிழில் 'சினிமாப் பைத்தியம்' என்று உருவானபோது நிறைய மாற்றங்களுக்கு உள்ளானது. எண்ணி ஐந்து காட்சிகளைத் தவிர மற்ற எழுபது காட்சிகளும் தமிழில் புதிய காட்சிகளே. ஹிந்தித் திரைக் கதை அப்படியே எடுக்கப்பட்டிருந்தால் இங்கு வெற்றி பெற்றிருக்குமா என்பது சந்தேகமே. அதே படம் வேறு தென்னிந்திய மொழிகளில் மாற்றமின்றி எடுக்கப்பட்டு அவை தோல்வியே கண்டன!

● நிறைய வெற்றிப் படங்களை எழுதிய நீங்கள் ஒரு வெற்றிப் படத்துக்கு ஜாதகம் சொல்லுங்களேன்?

சிறிய கதை, நிறைய நிகழ்ச்சிகள்.

● உங்களுடைய 'அந்தமான் காதலி' பெரிய கதை என்றாலும் வெற்றி பெற்றதே?

சரியாகக் கேட்டீர்கள்! அது ஒரு இளமைக் காலக் கதையும் முதுமைக் காலக் கதையும் இணைந்த பெரிய கதைதான். திரைக் கதை அமைப்பில் சிறிய கதையாகத் தோன்றியது. ஆனால் சிவாஜியின் முதுமைக் காலக் கதையைச் சொல்லத் தொடங்கி இடை இடையே இளமைக் காலக் கதையை இழையோட விட்டுச் சென்றதில் வளர்ந்து விட்டது. பொதுவான விதி முறையை நிரூபிக்கின்ற விதிவிலக்கான படம் அது.

● பல்கலைக் கழக மட்டத்தில் நீங்கள் இப்பொழுது செய்து கொண்டிருக்கும் இந்திய சினிமா பற்றிய ஆராய்ச்சி நூல் வெளியாகின்றபோது அது மற்ற திரைக் கதை ஆசிரியர்களுக்கு வெற்றிப் படங்களை எழுதத் துணையாக இருக்கும் அல்லவா?

புகுந்த வீட்டுக்கு மகள் போகப் பயப்படுகிறாள். தாய் அவளைத் தேற்றுகிறாள். ''புருஷனோடு வாழும் வாழ்க்கையே இன்பமானது. அவனோடு தனித்துக் கலந்து இருக்கும் சுகமே சுகம்'' என்கிறாள். உடனே மகள், ''அந்தச் சுகம் என்ன? எப்படி இருக்கும்?'' என்று கேட்டால் தாய் தன் கணவரோடு தனித்திருந்த சொர்க்க அனுபவங்களை விளக்கிச் சொல்ல முடியுமா என்ன? கலைப் படைப்புக்கள் எல்லாம் சுய அனுபவங்களே!

பேட்டி: **"சலன்"**

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''பொருத்தமற்ற காட்சி''

## மழலைப் பட்டாளம்



கடைசியில் குழந்தைகள் எல்லோரும் சேர்ந்து கும்மாளம் அடித்துக்கொண்டு திருமணம் செய்து வைப்பது பொருத்தமற்ற காட்சியாகத் தெரிகிறது. ஏன் அவ்வாறு அமைத்தீர்கள்?

காரத்தொழுவு

ரவிசங்கர்

குழந்தைகள் தொந்தரவு இல்லாமல் எழுத்தாளனை கதாநாயகன் லெட்ரீனில் உட்கார்ந்து கதை எழுதுவதாகப் படத்தில் காண்பிக்கிறீர்கள். ஆனால் கதாநாயகன் குடியிருக்கும் வீட்டுக்கு அவ்வளவு வசதியான லெட்ரீன் பொருத்தமாக இல்லை. பெரிய ஹோட்டலில் போய் லெட்ரீனில் உட்கார்ந்து எழுத அவசியம் என்ன? ரூமில் உட்கார்ந்து எழுதலாமே?

பொள்ளாச்சி

வி. சுப்பிரமணியன்

ஜோதி கார் விபத்தில் தன் சகோதரியும் அவள் கணவனும் இறந்ததைத் தன் சகோதரியின் ஐந்து குழந்தைகளுக்குத் தெரிவிக்காமல் மறைத்து விடுகிறாள். உருவ ஒற்றுமையின் காரணமாகச் சித்தியைத் தாயாகக் குழந்தைகள் எண்ணி விடுகிறார்களாம். என்ன தான் உருவ ஒற்றுமை இருந்தாலும் குழந்தைகளுக்குத் தங்கள் தாயை அடையாளம் தெரியாமல் போய் விடுமோ? அதுவும் அந்தப் பெரிய பையனுக்கு வயது 10, 12 இருக்கிறார் போல் காட்டுகிறீர்களே!

கோவை

எஸ். குமார்

நான் அறிஞர்களுக்காகப் படம் எடுக்கவில்லை. சராசரி மக்களின் பொழுது போக்குக்குத்தான் அவர்களை மகிழ்விக்கத்தான் படம் எடுத்தேன். எவ்வளவோ பெரிய இயக்குனர்கள் எடுத்த படங்கள் வந்திருக்கின்றன. ஒரு படத்தில் கணவனைப் போல உருவ ஒற்றுமையுள்ள ஒருவனை மனைவியே கண்டுபிடிக்கவில்லை! அதைப் போல மகனை அடையாளம் கண்டுபிடிக்காத தாய். ஓதோரா என்று ஒடின தெலுங்குப் படம் ஒன்று. மனைவி இறந்துவிட்டாள். அவளைப் போலவே உருவ ஒற்றுமை உள்ள வேறொரு பெண் (அவள் சகோதரி கூட இல்லை) இறந்த மனைவியின் இடத்திற்கு வருகிறாள். கணவன் அவளைத் தன் மனைவி என்று நினைத்தே ஏற்றுக் கொள்கிறான். அவளுடன் வாழ்கிறான். இந்த லட்சணத்தில் மறைந்த மனைவிக்கு ஒரு பிள்ளை வேறு உண்டு! நன்கு வளர்ந்தவர்களாலேயே அடையாளம் தெரிந்துகொள்ள முடியவில்லையாம். குழந்தைகளா அடையாளம் கண்டுபிடித்துவிட முடியும்? கேள்வி கேட்க வேண்டும் என்று ஆரம்பித்தால் எதை வேண்டுமானாலும் கேட்கலாம். மூன்று கேள்விகளுக்கும் இதுதான் என் பதில்!

—லக்ஷ்மி

# நட்சத்திர வடிவம் பரிசுத்திட்டம்-9
















இங்கு உள்ள துண்டங்களை ஜாக்கிரதையாக ஓரத்தை வெட்டிக் கத்தரிக்கவும். மேலும் பின்னப்படுத்தக் கூடாது. அவற்றை ஒரு வெள்ளைத் தாளில் இணை சேர்த்து ஒட்டித் திரைப்பட நட்சத்திரத்தின் உருவை முழுமையாக நீள் சதுரப் படமாகக் குறையின்றிக் காண முடிகிறதா பாருங்கள். பத்து கல்கி நேயர்கள் மட்டுமே அவ்வாறு காண முடியும். அதிர்ஷ்டசாலிகளான அந்தப் பத்துப் பேருக்கும் தலா ரூ. 25 பரிசு உண்டு. தவிர அந்தத் திரைப்பட நட்சத்திரத்தின் கையெழுத்துடன் கூடிய புகைப் படமும் அனுப்பி வைக்கப்படும். முடிவு தேதியான ஜூலை 7ம்தேதிக்குள் அனுப்பப்படும் உருவங்களே பரிசீலிக்கப்படும். உறையின் மேல் நட்சத்திர வடிவம்-9 என்று குறிப்பிடவும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. உங்கள் விலாசத்தைத் தெளிவாக, ஒட்டப்பட்ட படத்தின் மேலே குறிப்பிட மறவாதீர்கள்.

- ஆசிரியர் கல்கி, சென்னை-32

# ருசி கண்ட பூனை

## (திரைக்கதை)



✖ திரைக்கதை
வசனம் பஞ்சு
அருணாசலம்

மேடு பள்ளங்கள் நிறைந்த கிராமத்துப் பாதையில் ஒரு குதிரை வண்டி வருகிறது.

உள்ளே சாவித்திரி உட்கார்ந்திருக்கிறாள். எதையோ பறிகொடுத்துவிட்ட சோகம் முகத்தில் இழைகிறது.

குதிரை வண்டி ஒரு வீட்டு வாசலில் நிற்கிறது. சாவித்திரி இறங்கி வீட்டுக்குள் போகிறாள்.

● ● ●

சாவித்திரியின் கோலத்தைப் பார்த்து அம்மா லட்சுமி காரணம் கேட்கிறாள்.

நடந்ததைச் சொல்லி அழுகிறாள் சாவித்திரி.

● ● ●

சாவித்திரி வாந்தி எடுக்கிறாள். அவள் கர்ப்பமுற்று இருக்கிறாள் என்று புரிகிறது லட்சுமி அம்மாளுக்கு.

● ● ●

சாவித்திரி ஒரு பாறையின் மீது அமர்ந்து, தன் வாழ்வில் நடந்த சம்பவங்களை எண்ணிப் பார்க்கிறாள். அந்தக்காட்சிகள் அவள் மனத்திரையில் தெரிகின்றன.



✖ சுதாகர்,
விஜயபாபு,
சரிதா

● ● ●

இந்துமதி — ஆதிமூலம் என்னும் தம்பதியர் நடத்தும் ஒர்க்கிங் உமன்ஸ் ஹாஸ்டலில் தங்கிக் கொண்டு சாவித்திரி ஒரு டிராவல் ஏஜன்ஸியில் வேலை பார்க்கிறாள். மாலை மணி ஐந்து அடித்தால், அவளை அழைத்துப் போகக் காதலன் ரமேஷ் காருடன் காத்திருப்பான். சாவித்திரி அவனோடு புறப்படுவாள். இது வாடிக்கையான சம்பவம்.

சாவித்திரியும் ரமேஷும் உயிருக்கு உயிராய்க் காதலித்தார்கள்.

என் நெஞ்சம் உன்னோடு.
உன் நெஞ்சம் என்னோடு

என்று அந்நியோன்யமாய்ப் பாடித் திரிந்தார்கள்.

ஒரு நாள் ஆபீஸ் வாசலில் ரமேஷின் கார் நின்றிருந்தது. சாவித்திரி ஆவலுடன் ஓடிவந்தாள்.

காரில் ஒரு பெண் அமர்ந்திருந்தாள். சாவித்திரிக்கு ஆச்சரியம்.

புதியவளின் வேண்டுகோளுக்கு இணங்கிச் சாவித்திரி காரில் புறப்பட்டாள்.

ரமேஷும் அவளும், வழக்கமாகச் சந்திக்கும் இடத்தில் கார் வந்து நின்றது. சாவித்திரி ரமேஷோடு பழகுவதைக் கண்டிக்கிறாள் புதியவள். அவள் பெயர் கல்பனா.

கல்பனா: முன்பின் தெரியாத ஆம்பிளை கிட்டே ஒருத்தி நெருங்கிப் பழகினா... ஒண்ணு அவ 'விபசாரியா இருக்கணும்!



✖ சுதாகர்
சரிதா

இல்லே முட்டாளா இருக்கனும். நீ யாருன்னு நான் தெரிஞ்சுக்கவாமா?

சாவித்திரி: அம்மா! வார்த்தையை அளந்து பேசுங்க. ரமேஷும் நானும் ஒருத்தரை ஒருத்தர் காதலிக்கிறோம்.

கல்பனா: ஏற்கனவே என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்ட அவரு உன்னையும் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சத்தியம் வேறே செஞ்சாரா?

சாவித்திரிக்கு அதிர்ச்சி. ரமேஷ் கல்யாணம் ஆனவன் என்ற உண்மை அவளுக்கு இப்போதுதான் புரிகிறது.

சாவித்திரி: சத்தியமா இதெல்லாம் எனக்குத் தெரியாது.

கல்பனா: தெரிஞ்சிருந்தா?

சாவித்திரி: நான் அவருகூடப் பழகியிருக்க மாட்டேன்.



✖ காந்திமதி

எம். ஆர். ஆர். வாசு

சாவித்திரியின் பழைய நினைவுகள் கலைகின்றன.

● ● ●

**சா**வித்திரியின் வயிற்றிலிருக்கும் கருவைக் கலைக்க மனமில்லாத தாய் லட்சுமி சாவித்திரியை அவளுடைய மாமா வீட்டில் வைத்துப் பிரசவம் பார்க்கிறாள்.

பிரசவத்தில் சாவித்திரி மயங்கிக் கிடக்கும் நேரம், குழந்தையை எடுத்துச் சென்று வீரய்யா என்பவனிடம் ஒப்படைத்து வளர்த்து வரும்படி சொல்கிறாள் லட்சுமி அம்மாள்.

லட்சுமி: வீரய்யா! உன்னை எதுக்கு வரச் சொன்னேன் தெரியுமா? இந்தக் குழந்தையை வளர்க்கிற பொறுப்பை உங்கிட்டே ஒப்படைக்கப் போறேன்.

வீரய்யா: ஏனம்மா இது யார் குழந்தை?

சாவித்திரியின் மாமா: எனக்



இயக்குனர் ஜி. என் ரெங்கராஜன்



✖ விஜய்பாபு சர்தா



✖ சுதாகர், ஒய். விஜயா



எஸ். பாலசந்தர்
பொம்மை



பி. மாதவன்
எங்க ஊர் ராஜா

குத் தூரத்துச் சொந்தக்காரப் பொண்ணு ஒருத்தி பிரசவத்தில் செத்துப் போயிட்டா. அவ குழந்தை.

லட்சுமி: இப்ப உன் பொண்டாட்டியும் பச்சப் புள்ளக்காரிதானே? தாய்ப்பால் கொடுத்து வளர்க்க வசதியா இருக்குமேன்னு நான் இந்த யோசனைய எங்க அண்ணன் கிட்டச் சொன்னேன்.

சாவித்திரியிடம் குழந்தை இறந்தே பிறந்தது என்று பொய் சொல்லிச் சமாளிக்கிறாள் லட்சுமி.

வீரய்யா குழந்தையைத் தன் மனைவி செல்லாயியிடம் கொடுக்கிறான்.

செல்லாயி பணத்தாசை பிடித்தவள். ஆரம்பத்தில் மறுத்த அவள், குழந்தையை வளர்த்து வந்தால் பணம் கிடைக்கும் என்று தெரிந்ததும் சம்மதிக்கிறாள்.

● ● ●

வழக்கம் போல் சாவித்திரியைத் தேடி வந்த ரமேஷ் அவள் வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டுப் போய்விட்டாள் என்று கேள்விப்பட்டதும் அதிர்ச்சி அடைகிறான்.

சாவித்திரியின் ஊர் எது என்றே அவனுக்குத் தெரியாது. செய்வதறியாது தவிக்கிறான்.

● ● ●

சாவித்திரியைக் குமார் என்பவனுக்குக் கல்யாணம் செய்து வைக்க ஏற்பாடு செய்கிறார்கள் லட்சுமியும், அண்ணனும்.

சாவித்திரியின் மனச்சாட்சி கல்யாணத்துக்கு இடமளிக்கவில்லை. அம்மாவிடம் எதிர்த்து வாதாடுகிறாள்.

சாவித்திரி: என்ன நினைச்சுக்கிட்டும்மா நீ இந்தக் கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணினே? என் கதை முழுக்க உனக்குத் தான் தெரியுமே.

லட்சுமி: சாவித்திரி! ஏதோ அறியாமத் தவறு நடந்து போச்சு. அதை நாமதான் திருத்திக்கணும்.

சாவித்திரி: ஒரு தவறை மறைக்கிறதுக்கு இன்னொரு தவறு செய்றது ஒரு நாளும் நியாயம் ஆகாதும்மா.

லட்சுமி: தவறு சரிங்கிறதெல்லாம் நாம எடுத்துக்கிறதை பொறுத்துத்தான்ம்மா இருக்கு.

சாவித்திரி: இல்லேயம்மா. இந்தக் கல்யாணம் நடந்தா என் வாழ்நாள் பூராவும் நான் முள்ளு மேலே நிக்கிறமாதிரி இருக்கும். இந்த அக்கினிப் பரீட்சை எனக்கு வேண்டவே வேண்டாம்.

லட்சுமி: சாவித்திரி நீ படிச்சவ. ஒரு தாயோட மனசைப் புரிஞ்சுக்கம்மா. நான் எதுக்காக இவ்வளவு பாடு படறேன். உன் நல் வாழ்வுக்காகத் தான். எனக்குப் பொண்ணு பிள்ளையா வேறு யாரு இருக்கா? அவங்களுக்குக் கல்யாணம் பண்ணி வச்சுக் கண்குளிரப் பார்க்கறதுக்கு?

இந்தக் கல்யாணத்துக்கு நீ சம்மதிக்கலேன்னு நான் எதுக்காக உயிரோட வாழணும்? உன் விருப்பப்படியே செய்.

சாவித்திரி தன் நிலையை விட அம்மாவின் நிலையை நினைத்து வருந்துகிறாள்.

குழப்பத்தில் தவிக்கிறாள்.

● ● ●

சாவித்திரியின் குழந்தை கீதா என்ற பெயரில் வீரய்யா வீட்டில் வளர்கிறது.

செல்லாயியின் கொடுமைக்கு ஆளாகித் தவிக்கிறது.

லட்சுமி வந்து பார்க்கும் நேரத்தில் மட்டும் செல்லாயி கீதாவை அன்பாக நடத்துவது போல் நடிக்கிறாள்.

● ● ●

ரமேஷும், கல்டஷுவும் ஒரு கார் விபத்தில் சிக்கிக் கொள்கிறார்கள்.

விபத்தில் கல்டஷு இறந்து போகிறாள்.

● ● ●

சாவித்திரிக்கும், குமாருக்கும் கல்யாணம் நடந்து முதலிரவு அறையில் சந்திக்கின்றனர்.

குமார்: சாவித்திரி! புருஷன்தான் தன்னுடைய உலகம், புருஷன்தான் தன்னுடைய வாழ்வு. எல்லாமே அவன்

---

''பொருத்தமற்ற காட்சி''

## அவன் அவள் அது

என்னதான், பிடிவாதத்திற்கு மறுபெயர் லாவண்யாவாக இருந்தாலும், வெளியே செல்லப் பட்டுப் புடவை வாங்கி வரவில்லை என்ற காரணத்திற்காக இப்படியா பாவாடை, ஜாக்கெட் மட்டும் போட்டுக் கொண்டு பட்டுப் புடவை வரும்வரை அசிங்கமாக ஒரு குடும்பப் பெண் படுத்திருப்பாள்?

கோவை — வி. சரஸ்வதி

தான் நினைத்த காரியத்தை எப்படியும் செய்து முடிக்கும் மனப் பக்குவம் கொண்டவள் லாவண்யா.

நான்கு சுவர்களுக்கு இடையில் கணவன் மனைவிக்கு இடையே ஒரு போராட்டம் நடக்கிறது. அக்காட்சி விரசத்தைத் தொடவில்லை. அவளது குண இயல்பைத்தான் விளக்குகிறது என்று எந்த மன்றத்திலும் வாதாடத் தயார்!

—விக



தான்னு நவநாகரிகப் பெண்கள் நினைக்கிறதே இல்லே. அதனுலதான் ஒரு கிராமத்துப் பெண்ணுன உன்னே என் மனேவியா நான் தேர்ந்தெடுத்தேன்.

சாவித்திரிக்குத் திக் என்று இருக்கிறது. என்ன பதில் பேசுவது?

சாவித்திரி: இந்த நிமிஷம் முதல் என் உடல், பொருள் ஆவி மூன்றையும் உங்களுக்கே சமர்ப்பணம் பண்ணிட்டேன். இனி என் வாழ்வும், தாழ்வும் உங்க காலடியில.

காலில் விழுந்து கண்ணீரில் கரைகிருள்.

● ● ●

காலங்கள் சிரிக்கின்றன. சாவித்திரி — குமார் தம்பதியருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்து அவளுக்கும் வயது நான்கு ஆகிறது. குழந்தைக்குச் சித்ரா என்று பெயர்.

நடந்ததை யெல்லாம் ஒன்ருேடு ஒன்று முடிச்சுப் போட்டுப் பார்த்து, சீதா சாவித்திரியின் குழந்தையாகத்தான் இருக்க வேண்டும் என்று யூகிக்கிருள் செல்லாயி. இந்த ரகசியத்தை வைத்துக் கொண்டு லட்சுமி அம்மாளிடம் பணம் பறிக்கத் திட்டம் வகுக்கிருள். கணவன் வீரய்யாவைத் தூண்டி விடுகிருள்.

வீரய்யா சீதாவை அழைத்துக்கொண்டு சாவித்திரி வீட்டுக்கு வருகிருன்.

அவனேயும், சீதாவையும் பார்த்ததும் லட்சுமி அம்மாளுக்கு அதிர்ச்சி.

லட்சுமி: வீரய்யா நீயா?

வீரய்யா: ஆமாம்.

லட்சுமி: நீ இப்ப எதுக்கு வந்தே? நான் தான் உனக்கு அப்பப்ப பணம் கொண்டு வந்து கொடுக்கிறேனல்ல.

வீரய்யா: கொடுக்கிறீங்க. என் பொஞ்சாதி இருக்காளே அவ ஒரு பிசாசு. உங்க பேத்தியைப் படாத பாடு படுத்தரு... பேத்திங்கிறது எப்படித் தெரியும்னு பார்க்கிறீங்களா? எப்படித் தெரிஞ்சா என்ன?

அப்போது

சாவித்திரியும், குமாரும் வருகிருர்கள்.

சாவித்திரி: யாரும்மா இது?

லட்சுமி: வீட்ல வேலே செய்யறதுக்குச் சின்னப் பொண்ணு வேணும்னு சொல்லியிருந்தேன். அதான் வீரய்யா கூட்டிக்கிட்டு வந்திருக்கு.

சாவித்திரி: ஏய் குட்டி! ஒழுங்கா வேலே செய்வியா?


பி. புல்லேயா
பெண்ணின் பெருமை


ஏ. கே. வேலன்
தை பிறந்தால் வழி பிறக்கும்

வீரய்யா: எல்லா வேலேயும் செய்யுங்க. நல்ல புள்ளே. இதபத்தி அம்மாவுக்கு ரொம்ப நல்லாத் தெரியும்.

லட்சுமி: சாவித்திரி! எங்கயோ அவசரமா வெளியே புறப்பட்டுக்கிட்டு இருக்கீங்க போலிருக்கு. நீங்க போங்க. மத்ததெல்லாம் நான் பேசிக்கிறேன்.

சாவித்திரியும், குமாரும் புறப்படுகின்றனர். அவர்கள் போனதும் வீரய்யா லட்சுமி அம்மாவை மிரட்டிப் பணம் வாங்கிச் செல்கிருன்.

● ● ●

லட்சுமி அம்மாள் சீதாவுக்கும், சித்ராவுக்கும் ஒரே தட்டில் சோறு ஊட்டிக் கொண்டிருக்கிருள்.

அதைச் சாவித்திரி பார்த்து விடுகிருள்.

சாவித்திரி: அம்மா! என்னம்மா இது! சித்ராவுக்கும் வேலேக்காரக் குட்டிக்கும் ஒரேதட்டில வச்சு சோறு ஊட்டிவிடறே' சித்ராவுக்கு உடம்புக்கு ஏதாவது வந்துச்சுன்னு?

லட்சுமி: அது...வந்தும்மா... சீதா சாப்பிட்டாத்தான் நானும் சாப்பிடுவேன்னு சித்ரா அடம் பண்ணிஞ...அதான்...

சாவித்திரி: என்னமோ செய். நீ செய்றது எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கலே.

லட்சுமி கண் கலங்குகிருள்.

● ● ●

லட்சுமி அம்மாள் சீதாவிடம் பிரியமாக இருப்பதையும், வீரய்யாவுக்கு அடிக்கடி பணம் கொடுப்பதையும் சந்தேகிக்கிருள் சாவித்திரி.

சாவித்திரி: ஏன்ம்மா! பணம் கொடுத்ததெல்லாம் பத்தாதுன்னு கையில் கிடக்கிற வளேயலேயும், கழுத்திலே கிடக்கிற செயினேயும் கழட்டிக் கொடுக்கிற அள



"பொருத்தமற்ற காட்சி"

## மழலேப் பட்டாளம்

கதாநாயகி கௌரி மனுேகரிக்காக ஹோட்டலில் காத்துக்கொண்டு இருக்கிருள். அப்பொழுது கதாநாயகன் கதாநாயகியிடம் L. I. C. பற்றி கூறுகிருர். அந்த நேரத்தில் இடை வெட்டுக் காட்சியாக ரம்பத்தால் மரம் அறுப்பது போல் காட்டுகிருர்கள். L.I.C. நாட்டிற்கு எவ்வளவு சேவை செய்கிறது என்று தெரிந்தும் இந்தக் காட்சி அவசியம்தானு?

சேலம் — ஆர். ராம்குமார்.

நாங்கள் ரம்பத்தைக் காட்டி அறுப்பது போல் குறிப்பிடுவது இன்ஷூரன்ஸை அல்ல. அந்தப் பாத்திரம் பேசும் முறையையும் பாத்திரத்தின் தன்மையையும்தான் குறிப்பிடுகிறோமே ஒழிய எல். ஐ. ஸி.யை அல்ல. எல். ஐ. ஸி.யில் என் வீட்டில் உள்ளவர்கள் பலர் வேலே செய்கிருர்கள். ஏன்? நானே ஒரு எல். ஐ. ஸி. ஏஜெண்டுதான்!

—லக்ஷ்மி



எஸ். வி. பிரசாத்
இருவர் உள்ளம்



வியட்நாம் வீடு சுந்தரம்
ஞான ஒளி

வுக்கு வீரய்யாவுக்கும் உனக்கும் என்னம்மா உறவு?

லட்சுமியின் இதயத்தில் ஈட்டி பாய்ந்தது போல் இருக்கிறது.

லட்சுமி: என்ன வார்த்தை பேசிட்டே? நீ நினைக்கிற மாதிரி இல்லேம்மா. இதோ... உன் குழந்தை!

இந்த உண்மையைக் கேட்டதும் சாவித்திரி அதிர்ந்து போகிறாள்.

அதிர்ச்சியில் லட்சுமி இறந்துபோகிறாள்.

• • •

இதோ தன் குழந்தை என்று தெரிந்ததும், அவளிடம் அதிகமாக அன்பு காட்டுகிறாள். வேலைக்காரப் பெண்ணிடம் மனைவி அளவுக்கு அதிகமாக அன்பு காட்டுவதைக் கவனிக்கிறான் குமார்.

• • •

சாவித்திரியின் நினைவாகவே சுற்றித் திரிந்த ரமேஷ் ஒரு நாள் கடற் கரையில் சாவித்திரியைச் சந்திக்கிறான்.

தன்னை மறந்துவிடும்படி சொல்கிறாள் சாவித்திரி.

இரவு. வெளியூர் சென்றிருந்த கணவன் குமார் திரும்பி வரப்போகும் நேரம்.

ரமேஷ் குடி போதையில் வீட்டுக்குள் நுழைகிறான். சாவித்திரியிடம் பலாத்கார முறையில் நெருங்குகிறான்.

போராடுகிறாள் சாவித்திரி. வேறு வழியின்றிப் பக்கத்தில் இருந்த ஃப்ளவர் வாஸை எடுத்து அடிக்கிறாள்.

ரத்த வெள்ளத்தில் சாய்கிறான் ரமேஷ். சாவித்திரி கொலைக் குற்ற உணர்வுடன் தவிக்கிறாள்.

பின்னர்,

ரமேஷின் உடலைக் காரில் தூக்கி வைத்துக் கொண்டு போய், சாலை ஓரத்து மரம் ஒன்றில் மோதியது போல் காரை நிறுத்திவிட்டு வந்து விடுகிறாள்.

தவித்துக்கொண்டு சாவித்திரி உட்கார்ந்திருக்கிறாள். காலிங் பெல் அலறுகிறது. கதவைத் திறக்கிறாள்.

அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி.

ரமேஷின் உடலைக் காரிலிருந்து இறக்கி எடுத்து வருகிறான் குமார். டாக்டருக்கு போன் செய்கிறான்.

சாவித்திரி நெருப்பின் மேல் நிற்கிறாள்.

குமார்: என்ன சாவித்திரி பயந்துட்டியா! வர்ற வழியிலே ஒரு மரத்திலே கார் மோதி நின்னதைப் பார்த்தேன். இறங்கிப் பார்த்தா இவன். இவன் என் காலேஜ் ஃப்ரெண்ட்.

சாவித்திரி: அப்படியே ஆஸ்பத்திரியில் கொண்டு போய் அட்மிட் பண்ணியிருக்கலாமே.

டாக்டர் வருகிறார். ட்ரீட்மெண்ட் கொடுக்கிறார்.

ரமேஷ் கண் விழித்துப் பார்க்கிறான். குமார் சாவித்திரியை அவனுக்கு அறிமுகப்படுத்துகிறான். ஆக்ஸிடெண்ட் ஆனதுக்குக் காரணம் கேட்கிறான்.

குமார்: ரமேஷ்! இப்படியா குடிச்சுட்டுக் கார் ஓட்டறது? அப்படி என்னடா உனக்குக் கவலை?

ரமேஷ்: எனக்கு யாரும் இல்லை. என் மனைவி இறந்துட்டா. நான் அனாதை.

குமார்: இன்னொரு கல்யாணம் பண்ணிக்க வேண்டியதுதானே?

ரமேஷ்: இல்லை குமார்! நான் ஒருத்தியை காதலிச்சேன். அவ என்னை மறந்துட்டு வேற ஒருத்தனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா.

குமார்: அப்போ அவளை நினைச்சுத்தான் குடிக்கிறியா

ரமேஷ்: இல்லே! அவளை மறக்கத்தான் குடிக்கிறேன். முடியலே.

சாவித்திரிக்குத் தர்மசங்கடமாகி விடுகிறது.

"பொருத்தமற்ற காட்சி"

## பில்லா

போலீஸ் இலாக்காவில் பில்லாவின் நடை, உடை, பாவனை, ஸ்டைல் எல்லாவற்றையும் சினிமா படம் எடுத்து வைத்துள்ளார்கள். அவனைப் போலவே நடக்க இன்னொருவனுக்குப் பயிற்சி தரப் பயன்படுத்துகிறார்கள்.

சினிமா படம் எடுத்தவர்கள் கடத்தல்காரனை ஏன் பிடித்திருக்கக் கூடாது?

சிவகாசி
எஸ். ஸ்ரீதரன்



போலீஸ் டிபார்ட்மெண்டில் ஒரு பழக்கம் உண்டு. ஒரு தடவை ஒருவன் சிறு குற்றமிழைத்து அகப்பட்டுக் கொண்டால் அவனைப் பற்றிய சகல விவரங்களையும் படங்கள் உட்பட ஃபைல் பண்ணி வைத்து விடுவார்கள். பின்னால் அவன் பெரும் குற்றம் ஏதாவது செய்ததாகச் சந்தேகித்தால் அவனைக் கண்டு பிடிக்க முன்பு 'ஃபைல் செய்த புகைப்படங்களை, சினிமாப் படங்களை எடுத்துப் போட்டுப் பார்ப்பார்கள். படத்தில் பில்லா தவறு செய்கிறான் என்று தெரிந்தாலும் ஆதாரமில்லாததனால் பிடிக்க முடியாமல் போய்விடுகிறது. ஆதாரத்துடன் அவனை மாட்டி வைக்கப் போலீஸ் முயற்சி எடுக்கிறது. பில்லாவை ஆட்டிப் படைப்பது யார் என்று அறியவும் வேண்டியிருக்கிறது. இதைத்தான் அந்தக் காட்சி உணர்த்துகிறது. —ஆர். கிருஷ்ணமூர்த்தி





ஏ. ஸி. திரிலோக சந்தர்
பாரத விலாஸ்

மதுரை திருமாறன்
சக்கரம்

சாவித்திரி: இப்ப அவரு அடிபட்டிருக்காரு. ரெஸ்ட் எடுக்கட்டுமே. காலையில பேசிக்குவோம்.

குமார்: ரமேஷ்! நல்லாத் தூங்கு. உன் காதல் கதையைக் காலையில பேசிக்கலாம்.

ரமேஷ் எங்கே தூங்கும். அவனுக்கும் இருந்த காதல் தொடர்புகளைக் கணவனிடம் சொல்லிவிடுவானோ என்று சாவித்திரி ஒவ்வொரு நிமிடமும் தவிக்கிறாள்.

● ● ●

லட்சுமி அம்மாள் உயிருடன் இருந்த வரை அவளை மிரட்டிப் பணம் பறித்து வந்த வீரய்யா, இப்போது சாவித்திரியை மிரட்டிப் பணம் பறிக்க வருகிறான்.

வீரய்யா சாவித்திரியை மிரட்டுவதையும், அவள் தவிப்பதையும் பார்த்த ரமேஷ் வீரய்யா மீது கோபம் கொள்கிறான். அவனுக்குத் தேவையான பணத்தைத் தான் தருவதாகச் சொல்லி ஒரு தனி இடத்துக்கு அழைத்துச் செல்கிறான்.

இனி நீ சாவித்திரி வீட்டுப் பக்கம் போகக் கூடாது. அவளுக்கு எந்த தொல்லையும் கொடுப்பதை நான் அனுமதிக்க மாட்டேன் என்று வீரய்யாவைக் கண்டிக்கிறான்.

வீரய்யா முரட்டுத்தனமாகப் பேசவே அவனை அடிக்கிறான். அப்போது வீரய்யா ஒரு கிணற்றுக்குள் விழுந்து இறந்து போகிறான்.

● ● ●

ரமேஷ் தன் ஊருக்குப் புறப்படுகிறான். அவனை வழியனுப்ப சாவித்திரி, குமார், குழந்தைகள் அனைவரும் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்திருக்கின்றனர்.

அப்போது.

சித்ரா: அப்பா! எனக்குப் பழம் வாங்கித்தா.

குமார்: நீ மாமா கிட்ட இரு. நான் போய் வாங்கிட்டு வந்திடறேன்.

குழந்தையை ரமேஷிடம் கொடுத்துவிட்டுக் குமார் போகிறான்.

இப்போது.

ரமேஷும் சாவித்திரியும் குழந்தைகளோடு நிற்கிறார்கள்.

அப்போது.

ரயிலிலிருந்து இறங்கி இந்துமதி வருகிறாள். ரமேஷும் சாவித்திரியும் கல்யாணம் பண்ணிக் கொண்டு விட்டார்கள் போலிருக்கிறது என்று எண்ணிக்கொள்கிறாள் இந்துமதி.

இந்துமதி: சாவித்திரி! ரமேஷ்! நீங்க ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக் கிட்டீங்களா. கங்கிராஜுலேஷன்ஸ்! ஏனம்மா எனக்கு ஒரு இன்விடேஷன் அனுப்பியிருக்கக் கூடாதா;

இதைக் கேட்டபடி குமார் வருகிறான்.

சாவித்திரி தடுமாறிப் போகிறாள்.

சாவித்திரி: மேடம்! இவர்தான் என் ஹஸ்பண்ட் குமார்.

குமாரை அவளுக்கு அறிமுகப்படுத்துகிறாள். இந்துமதி ஒரு மாதிரி பூசி மழுப்புகிறாள்.

அப்போது.

ஆதிமூலம் வருகிறார்.

ஆதிமூலம்: சாவித்திரி!.... ரமேஷ் பின்னாலேயே நீ சுத்திக்கிட்டுத் திரிஞ்சது வீண் போகலே.

விவரம் புரியாமல் பேசுகிறார்.

ஆதிமூலம்: லேட் ஆனாலும் எப்படியோ ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கிட்டீங்க... உன் பேர் என்ன பாப்பா!

சிதா: சிதா!

ஆதிமூலம்: உன் பேரு

"பொருத்தமற்ற காட்சி"



## ரிஷி மூலம்

பதினெட்டு வருடங்கள் கழித்துத் தன் மகனைக் காணப்போகும் ஒரு தாய் அதுவும் பதவியில் இருக்கும் டி.எஸ்.பி. யின் மனைவி அந்த மகிழ்ச்சியை எவ்வாறு வெளிப்படுத்துகின்றாள்? தன்னை மிக அழகாக அலங்கரித்துக் கொண்டு ஓடுகிறாள்! எங்கே? காடு, மலை வயல், வரப்பின்மீது! ஸ்லோமோஷனில் வித விதமாகப் போஸ் கொடுத்துக் கொண்டு! அப்படியா செல்வது? பிரிந்திருந்த மகனைக் காணப் போகும் தாய்ப் பாசத்தின் மனநிலை காட்சியில் தென்படவில்லையே?

ஆசைமிக்க கணவனின் வருகையைத் தேடும் மனைவி அடையும் மகிழ்ச்சியின் பிரதிபலிப்பாகத் தென்படுகிறதே!

அல்லம்பாளையம்

பி. என். ரவி

'மழை வருவது மயிலுக்குத் தெரியும் மகன் வருவது மனத்துக்குத் தெரியும்' என்பதுதான் பாட்டின் பல்லவி. இதை எப்படி கணவனின் வருகையால் மகிழ்ச்சியைத் தேடும் மனைவியின் பிரதிபலிப்பாக எடுத்துக்கொள்ள முடியும்? பாட்டின் அர்த்தத்தை எடுத்துக் கொண்டு பார்த்தீர்களானால் தாயின் பாசம் விளங்கும். இந்தப் பாடல் காட்சி என் கண்ணான ஒளிப் பதிவு பாபுவுக்கு அதிகம் பாராட்டை வாங்கிக் கொடுத்தது. —எஸ். பி. முத்துராமன்



ஆரூர் தாஸ்
பாசமலர்



ஏ. எல். நாராயணன்
பில்லா

சித்ரா: சித்ரா.

ஆதிமூலம்: சிதா — சித்ரா. இந்துமதி! பார்த்தியா சித்ரா அலங்க அம்மா சாவித்திரி சாயல். சிதா அப்பா ரமேஷை அப்படியே உரிச்சு வச்சிருக்கு.

குமார் அங்கிருந்து விருட்டென்று போகிறான்.

சாவித்திரி குழந்தையை எடுத்துக் கொண்டு பின் தொடர்கிறாள்.
ரமேஷ் ஸ்தம்பித்து நிற்கிறான்.

வீட்டுக்கு வந்த குமாருக்குப் பழைய சம்பவங்கள் ஞாபகத்துக்கு வருகிறது. சிதாவிடம் சாவித்திரி அன்பாகப் பழகியது, வீரய்யா பேசியது, ஆதிமூலம் பேசியது. இவைகளைக் கொண்டு.

கல்யாணத்துக்கு முன்பே சாவித்திரிக்கும் ரமேஷுக்கும் பிறந்த குழந்தைதான் சிதா என்று முடிவுக்கு வருகிறான்.

குமார்: கல்யாணத்துக்கு முன்னமேயே குழந்தை பெத்தவ நீ. கொஞ்சம் ஏமாந்தாக் கொலை செய்யக் கூட அஞ்ச மாட்டே. போ! போயிடு! சும்மா போக வேண்டாம். கொஞ்ச நாள் என்கூட விபசாரியாத் தொழில் நடத்தினியே, அதுக்கு உனக்கு எவ்வளவு பணம் வேணுமோ எடுத்துக்கிட்டுப் போ! நீ ரமேஷுக்குப் பெத்த சனியனையும் கூட அழைச்சுக்கிட்டுப் போய்த் தொலை!

சாவித்திரி: நான் ரமேஷைக் காதலித்தது உண்மை. எங்களுக்குள்ளே எந்தத் தப்பான உறவும் ஏற்படவில்லை. நான் நிரபராதி. நான் சொல்றதைக் கேளுங்க.

சாவித்திரி தனக்கு நேர்ந்ததை — இரவும் பகலும் அவளைத் துன்புறுத்தி வரும் ஒரு சம்பவத்தைக் கூறுகிறாள்: பல காலத்துக்கு முன் ஓர் இரவு, மழையிலிருந்து தப்ப, ஒரு விடுதியில் ஒதுங்கும்போது, விடுதிக் காப்பாளன் பரிவுடன் அவளை, மழையில் நனைந்த உடைகளைக் கழற்றிப் பிழிந்து உலர வைத்துக் கொள்ள ஓர் அறைக்குள் அனுப்புகிறான். மின்சாரத் தடை. இருட்டுப் அச்சமயம் திடீரென்று ஒருவன் அவளை அணுகிப் பலவந்தமாக அவள் கற்பைச் சூறையாடி விடுகிறான். இருட்டில் ஒருவரை ஒருவர் பார்க்க முடியவில்லை. ஆனால் விடுதிக் காப்பாளனிடம் பணம் கொடுத்து விட்டுச் செல்லும் அவன் ஸ்கூட்டர் நம்பர் மட்டும் பளிச்சென்றுஒரு மின்னல் ஒளியில் அவளுக்குத் தெரிந்தது. மறக்க முடியாத வேதனையுடன் நெஞ்சில் பதிந்து விட்ட அந்த ஸ்கூட்டர் நம்பரைச் சொல்கிறாள் சாவித்திரி.

அந்த நம்பர் குமாருக்கு நன்கு பரிச்சயமானதுதான்! ஏனெனில் கல்யாணமாவதற்குச் சில தினங்கள் முன்பு அவன் விற்றுவிட்டது அவனுக்குச் சொந்தமான அதே ஸ்கூட்டர்தான். அன்று இரவு அந்த விடுதிக்கு வந்து அவளை அனுபவித்ததும் அவனேதான்! இதை உணர்ந்த குமார் இன்று தெய்வச் செயலாகத் தன் மனைவியாகி விட்டிருக்கும் அவளிடம் மன்னிப்பு வேண்டுகிறான். சாவித்திரியின் மனச் சுமையும் இறங்குகிறது.

அப்போது வீரய்யாவைக் கொன்றதாக ரமேஷைப் போலீசார் கைது செய்துள்ள செய்தி வருகிறது. சாவித்திரியின் நல்வாழ்வுக்காக ரமேஷ் செய்துள்ள தியாகத்தைப் பார்த்து நெகிழ்கிறான் குமார்.

கணவன் — மனைவியிடையே மறுபடி துளிர் விடும் அன்புக்குக் குழந்தைகள் துணை நிற்கின்றன.

---

"பொருந்த மற்ற காட்சி"

## பில்லா

பில்லா தப்பித்துக்கொள்ளக் கையிலிருக்கும் பெட்டியை வீசுகிறான். அது வெடிக்கிறது. ஏன் சார்! அதே ரஜனி, ப்ரியாவில் அதையேதானே செய்திருக்கிறார். 'டான்'னில் அப்படி இருந்தால் இருந்து விட்டுப் போகட்டுமே. இங்கே தப்பிக்கக் கொஞ்சம் வித்தியாசமாய்த் தந்திரம் செய்யக் கூடாதா?
சித்தோடு

எஸ். தவமணி

டான் ஹிந்திப் படம் வந்து நாலு வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டது. 'ப்ரியா' படத்திலுள்ள இந்தக் காட்சி 'டானை'ப் பார்த்து அப்படியே காப்பி அடித்து எடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் நாங்கள் 'டான்' என்ற ஹிந்திப் படத்தைத் தமிழில் தயாரிக்க உரிமை பெற்று, பில்லாவை எடுத்திருக்கிறோம். தமிழில் எடுக்கும்பொழுது டான் காட்சிகளை அப்படியேதான் எடுக்க முடியும். பில்லாவுக்கு முன்னால் காப்பி அடித்து எடுக்கப்பட்ட 'ப்ரியா' வெளியானது. இதற்கு நாங்கள் என்ன செய்ய முடியும்?

—ஆர். கிருஷ்ணமூர்த்தி



# நாவல் படமானபோது...

உங்கள் நாவல்கள் பல படமாகியுள்ளன. திரைப்படம் உங்களுக்குத் திருப்தி அளித்ததா! எந்த அளவில் என்று கேட்டபோது:

## அகிலன்



இலக்கிய முயற்சிகள் திரைப்படங்களை நினைவில் வைத்துக் கொண்டு எழுதப் படுவதில்லை. என்னுடைய நாவல்கள் படிப்பதற்காக எழுதப்பெற்றவையே தவிர, பார்ப்பதற்காக அல்ல. ஆகவே, நாவல்களில் உள்ள ஆழத்தையும் நுண்ணுணர்வுகளையும் திரைப் படங்களில் கொண்டு வருவது மிக மிகச் சிரமம் என்பது எனக்கு முன்பே தெரியும். எனவே நாவல்களைப் போல் திரைப்படங்கள் இல்லையே என நான் வருந்துவதில்லை. ஆழ்ந்து படிக்கக் கூடியவர்களுக்காக எழுதப்பெறுவது நாவல். படிப்பில்லாத பெரும் கூட்டத்தையும் தன்னிடம் ஈர்ப்பது திரைப்படம். இந்த வேறுபாட்டை நான் நன்கு தெரிந்து கொண்டிருக்கிறேன்.

என்னுடைய கதைகளைக் கொண்ட மூன்று திரைப் படங்களில் 'குலமகள் ராதை' என்ற படம், மூலக் கதைக்குச் சிறிதும் சம்பந்தமில்லாமல் எடுக்கப்பட்டு விட்டது. மற்ற இரண்டு படங்களான 'பாவை விளக்கு', 'மதுரையை மீட்ட சுந்தர பாண்டியன்' ஆகியவற்றை மூலத்தை ஒட்டியே எடுப்பதற்குப் பெரு முயற்சி செய்துள்ளனர்.

மிகப் பெரும் பொருட் செலவில் பழங் காலத்துப் பாண்டிய சோழப் பேரரசுகளை நம் கண் முன்னே கொண்டு வரப் பெரு முயற்சிகள் செய்யப்பட்ட படம் 'மதுரையை மீட்ட சுந்தர பாண்டியன்'. அதில் சோழப் பேரரசர் குலோத்துங்க சோழரின் அரசவையில், பாண்டிய நாட்டுக் கவிஞனாக மாறு வேடத்தில் வரும் சுந்தர பாண்டியன் பாடும் பாடல் அந்த இடத்துக்கு ஏற்ற உணர்ச்சி மிக்க பாடலாகும். நாவலை ஒட்டிய அந்தப் பாடல் காட்சி எனக்கு மிகவும் பிடித்தது.

நாவலின்படி கயல்விழி ஏற்கனவே நடைபெற்ற போரின்போது ராஜராஜனிடம் தன் பெண்மையைப் பறி கொடுத்தவள். அவளுடைய மனப்போராட்டங்களுக்கு அடிப்படைக் காரணம் அதுவே. அதையும் திரைப் படத்தில் கொண்டு வந்திருந்தால், அதனால் அந்தப் பாத்திரத்தின் பண்பு இன்னும் சிறந்து விளங்கி யிருக்கும் என்பது என் எண்ணம்.

## லக்ஷ்மி

பக்ஷிராஜாவின் காஞ்சனாவில் (காஞ்சனையின் கனவு) என் கதையை முழுக்க முழுக்கக் காண முடிந்தது. வசனங்களைக் கூடச் சில இடங்களில் கதையிலிருந்து எடுத்துக்கொண்டிருந்தனர். வசனம் எழுதுபவர் மிகவும் பொருத்தமாக, அழுத்தமாகச் சிறப்பாக எழுதியிருந்தார் என்று திருப்தியாக இருந்தது.

இருவர் உள்ளம் என்ற தலைப்பில் எனது 'பெண் மனம்' உருவாயிற்று. மூலக் கதையிலிருந்து திரைக் கதை மிகவும் விலகி விட்டிருந்தது. கதாநாயகனை ஒரு கொலைக் குற்றத்திலே சிக்க விட்டிருப்பதைக் கண்டு அதிர்ச்சி அடைந்து போனேன். இது என் கதைதானா என்று பிரமிக்கும் அளவு சினிமாவில் பல மாற்றங்களைக் கண்டேன். மனதுக்குக் கஷ்டமாக இருந்தது.



சினிமா கதை வசனத்தை டாக்டர் கலைஞர் திரு மு. கருணாநிதிதான் கையாண்டிருந்தார். மூலக் கதை 'லக்ஷ்மி' என்று படத்தில் போடவில்லை. ஆனால் பத்திரிகைகள் — குறிப்பாக பேசும் படம்— மறக்காமல் அந்தப் பெருமையை எனக்கு வழங்கின.

பிலிம் ஃபேன்ஸ் அசோஸியேஷன் அந்த ஆண்டின் சிறந்த கதையாகப் பெண் மனத்தைத் தேர்ந்தெடுத்தது.

சில படாதிபதிகள் என்னிடம் என் புத்தகங்களையே இரவலாகக் கேட்க வருகிறார்கள். நான் மறுத்து விடுகிறேன். லட்சக் கணக்கில் படம் எடுக்கச் செலவிடுகிறவர்கள் சிறிதளவு ஒரு எழுத்தாளரின் புத்தகங்களை வாங்கச் செலவழிக்கக் கூடாதா? ஒரு நல்ல கதையைத் தேடிப் பார்க்கப் புத்தகங்களை வாங்கக் கூட மனமில்லை என்றால் திரை உலகு எப்படி முன்னேறும்?

இன்னொருவர் "உங்கள் கதையின் கருத்தை எழுதித் தர முடியுமா? படம் எடுக்க விரும்புகிறோம்" என்று கேட்டார். ஒரு கதையை முழுக்கப் படிக்க நேரம் ஒதுக்கிக் கொள்ள முடியாதவர் படம் பிடிக்கவாவது? கும்பிடு போட்டு அனுப்பி விட்டேன்.



## புஷ்பா தங்கதுரை

இரண்டு கதைகள் படமாகி விட்டன. ஒன்று தயாரிப்பில் இருக்கிறது. 'ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது' எனக்குச் சுமாரான திருப்தியைக் கொடுத்தது. அதில் காதல் மெல்ல மெல்ல வளர வேண்டும் என்பது என் விருப்பம். நம் சமூகத்தில் அந்த மெதுவான வளர்ச்சிதான் ரியலிஸத்துக்கு ஒட்டியதாக இருக்கும். ஆனால் படத்தில் கதாநாயகி கதாநாயகனைப் பார்த்த முதல் காட்சியிலேயே புன்னகை பூத்துவிடுகிறாள். எனக்கு அது வேதனை தந்தது.

இரண்டாவது கதையில் ''பிளாஷ்பேக்'' முக்கியமான அம்சம். ஆனால் அது வந்த இடம் முற்றிலும் தவறான இடம். உரிய இடத்தில் போட்டிருந்தால் பார்ப்போருக்கு இன்னும் ஈடுபாடு இருந்திருக்கும்.

ஊதாப்பூ ஆழமான காதல் கதை. அதை செம்மீன், சங்கராபரணம் போல் இலக்கியத் தரமான படமாக்கியிருக்கலாம். ஒரு காவியமாகவே ஆக்கிவிடலாம் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

'நந்தா என் நிலா' ஒரு கிராமிய காதல் கதை. அழகான ஒருதலைக் காதல். இந்த அடிப்படை படத்தில் பிரதிபலிக்கவில்லை. சாதாரண மேற்பரப்புக் காதலாகப் போய்விட்டது. இதில் கவர்ச்சிக்காக ஒரு நட்சத்திரக் கிரிக்கெட் விளையாட்டைக் கொண்டு வந்தார்கள். என் கதை 'அவுட்'டாகி விட்டது.

## சிவசங்கரி

நான் எழுதிய இரண்டு கதைகள் திரைப் படமாகியிருக்கின்றன. ''திரிவேணி சங்கமம்'' கன்னடத்தில் 'மறையாத தீபாவளி' என்றும் ''ஒரு சிங்கம் முயலாகிறது'' என்ற கதை 'அவன், அவள், அது' என்றும் படமாகியிருக்கின்றன.



'அவன், அவள், அது' எடுக்கப்பட்ட முறை எனக்கு ரொம்பத் திருப்தி என்று சொல்ல முடியாது. 65 சத விகிதம்தான் என்னுடைய மார்க். என்றாலும் குறைகளைப் பெரிதாக நாம் பார்க்க முடியாத அளவு இயக்குனர் முக்தா சீனிவாசனும் நடித்த நட்சத்திரங்களும் திரைக் கதை வசனம் எழுதிய விசுவும் தங்களது பாகங்களைச் சரிவரச் செய்திருக்கிறார்கள் என்பதைச் சொல்லாமலும் இருக்க முடியாது.

இந்தப் படத்தில் சிற்சில மாற்றங்கள் செய்யப்பட்டிருந்தாலும் என் கதையின் வடிவத்தைக் காண முடிகிறது. அதில் எனக்கு மகிழ்ச்சியே.

கதையில் சிங்கமாகக் காட்டியிருந்த கதாநாயகனை நேர் மாறாகவும் சாதுவாகக் காட்டியிருந்த கதாநாயகியை அதற்கு நேர் மாறாகவும் மாற்றியிருந்தார்கள். இப்படி அவர்கள் மாற்றியபொழுது படத்தில் உள்ளது போலத்தான் காட்சிகள் இருக்க முடியும்.

இந்தப் படத்தில் எனக்குப்பிடித்த காட்சிகள் பல. பிடிக்காத காட்சிகள் சில. ஆனால் ஒன்றை நான் எப்பொழுதும் நினைவில் வைத்துக்கொள்வேன். என்னை விட சினிமா மீடியத்தையும் அது போய்ச் சேரும் மக்களையும் நன்கு அறிந்தவர் டைரக்டர்தான்.

## சுஜாதா



என் நாவல்கள் காயத்ரி, அனிதா இளம் மனைவி, ப்ரியா, ஜன்னல் மலர் திரைப் படமாக வந்தன. நினைத்தாலே இனிக்கும் படத்துக்குத் திரைக் கதை என்று ஒன்று எழுதிக் கொடுத்தேன். கரையெல்லாம் செண்பகப்பூ திரைப் படமாக வரவிருக்கிறது.

காயத்ரியில் முடிவை மாற்றியிருக்கிறார்கள். அந்த முடிவு தமிழ்ப் பண்பாட்டுக்கும் பி, ஸி சென்டர்களில் வசூலுக்கும் தேவையாக இருக்கிறது என்று சொன்னார்கள்.

அனிதா இளம் மனைவி 'இது எப்படி இருக்கு' என்ற ரூபத்தில் நடிகர்களின் ஒத்துழைப்பு இல்லாமையாலும், அவசரத்தாலும், வந்தசுவட்டில் காணாமல் போயிற்று. 'ப்ரியா' உப கதைகள் சேர்க்கப்பட்டு மெயின் கதை நீக்கப்பட்டு, இடம் மாற்றப்பட்டுப் பற்பல விசித்திர வதைகளுக்கு உள்ளாகி டைட்டில் மட்டும் தப்பித்து வந்தது.

இளைய ராஜாவின் இசை (குறிப்பாக ரீ ரிகார்டிங்) சிங்கப்பூரில் சில விடுமுறைக் காட்சிகள் இவைகளால் நூறு நாட்களுக்கு மேல் ஓடியது.

'நினைத்தாலே இனிக்கும்' நான் எழுதிக் கொடுத்ததை எடுப்ப'தில் அவர்களுக்கு நட்சத்திர கால்ஷீட், லொகேஷன் என்று பல சங்கடங்கள் இருந்தன. கதையைச் சட்டு பேனிக்கு மாற்றி ஏகப்பட்ட பாடல்களைச் சேர்த்துப் பேல் பூரி பண்ணி வெளியிட்டார்கள்.

ஜன்னல் மலர்! அதை நான் இன்னும் பார்க்கவில்லை.

கரையெல்லாம் செண்பகப்பூவை மாற்றாமல் அப்படியே எடுக்கிறேன் என்று சொல்லியிருக்கிறார்கள் டைரக்டர்கள். புதிய துடிப்பான இளைஞர் குழாம். என்ன செய்யப் போகிறார்கள் என்பதைப் பார்க்கலாம்.

கதையைக் கொடுத்துவிட்டு அப்புறம் கெடுத்து விட்டார்களே என்று மாய்ந்து போவதில் அர்த்தமில்லை என்று கண்டு கொண்டேன். அவர்கள் விளையாட்டின் விதிகள் வேறு.

## மகரிஷி:

நாவலின் மையக் கரு, பாத்திரங்களின் அடிப்படை அமைப்பு ஆகியவைகளைக் கவனமாக அனுகித்தான் என் நாவல்கள் எல்லாமே படமாக்கப் பட்டிருக்கின்றன.



சில நாவல்களில் அவர்கள் செய்த சிற்சில மாற்றங்களை நான் பெரிதுபடுத்த விரும்பவில்லை. ஒருவேளை அவை படத்தின் தலையெழுத்தை மாற்றியிருக்கக் கூடும். மாற்றியுமிருக்கிறது. அம்மாதிரி நேரங்களில் வீண் கௌரவம் பாராட்டாமல் சற்றே விட்டுக் கொடுப்பதில் தவறில்லை. கதையின் உருவத்தையோ, பாத்திரத்தின் குண சித்திரத்தையோ மாற்ற நான் அனுமதிப்பதில்லை. அம்மாதிரி சோதனைகளும் எனக்கு உண்டானதில்லை. ஆக, எல்லாமே எனக்குத் திருப்தி அளித்த படங்கள்தாம். எனினும் ஏழெட்டுக் குழந்தைகளில் ஒரு செல்லக் குழந்தை இருப்பது போல எனக்கு மிகவும் திருப்தியளித்த படம் வட்டத்துக்குள் சதுரம். தெளிந்த நீரோடை போன்ற பஞ்சு அருணாசலத்தின் திரைக் கதை வடிவத்தாலும், எஸ். பி. முத்துராமன் அவர்களின் ஈடுபாடு மிக்க டைரக்ஷனிலும் அது ஒரு காவியம் போல வெளிப்பட்டிருந்தது.

எனக்குத் திருப்தியளிக்காத சில சில்லறை மாற்றங்களால் சற்றே பின்தங்கிய படம் நதியைத் தேடி வந்த கடல். அதன் முடிவை இன்னும் சரியாகச் செய்திருக்கலாமே என்று எண்ணினேன்.

ஒரு சாதாரண நதியைத் தேடி மாபெரும் கடலே வருகிறது. இந்தக் குறியீடு படத்தில் இன்னும் அழுத்தமாகப் பதிவாகியிருந்தால் இப்பொழுது அந்தப் படம் அடைந்த ஒரு சுமாரான வெற்றி மாபெரும் வெற்றியாக மாறியிருக்கும்.

## ராஜேந்திர குமார்

வணக்கத்திற்குரிய காதலியே, கண்ணாமூச்சி ஆகிய இரு படங்கள் வெளிவந்திருக்கின்றன.



'கண்ணாமூச்சி' என்னிடம் கண்ணாமூச்சி விளையாடவில்லை. ஒரு காட்சியில் கதாநாயகி லதா போட்டுக் கொண்டிருக்கும் நகைகள் எல்லாமே கதாநாயகன் சிவகுமாருக்கு மாறிவிடும். படத்தில் இதைச்செய்வது அந்த பூதம்தான். எனக்குப் பிடித்த நகைச்சுவைக் காட்சி என்று இதைச் சொன்னால் பிடிக்காத காட்சி கடைசியில் வருகிறது. திடீரென்று லதா குதிரையில் வருகிறார். நூறு மைல் வேகத்தில் சென்ற கார் நிறுத்தப்பட்டவுடன் சற்று நேரத்திலேயே பின்னால் குதிரை வந்துவிடுகிறது. ஹார்ஸ் பவர் என்று இதைத்தான் சொல்கிறார்கள் போலும்.

நான் சினிமாவுக்குக் கொடுக்கும் கதைகள் எல்லாமே நான் எழுதியபடியே வரும் என்றோ, இல்லை அதைவிட மெருகேற்றி அழகாக அமைத்திருப்பார்கள் என்றோ எண்ணுவது கிடையாது. அதனால் ஏமாற்றமோ, சந்தோஷமோ கிடையாது.

பேட்டி: ''அசோக்குமார்''

---

'பொருத்தமற்ற காட்சி''

## அவள் அவள் அது



ஒரு காட்சியில் லாவண்யா தனக்குப் பிள்ளைப் பேறு இல்லை எனத் தெரிந்தவுடன் தன் கணவனை வேறொரு திருமணம் செய்து கொள்ளச் சொல்கிறாள். அப்படிச் சொல்லும் போதே அவள் தன் கணவனை வேறொருத்திக்கு விட்டுக் கொடுக்கச் சம்மதிக்கிறாள் என்று தானே அர்த்தம்? பிறகு தன் கணவனின் ஜீவ அணுக்களைச் சுமக்கும் பெண்ணைத் தன் கணவன் சந்திப்பதை விரும்பாத அவள், தனக்குத் தெரியாமலே அவர்களிருவரும் சந்தித்து உடலுறவு கொண்டதை அறிந்து மனம் பொறுக்காமல் வீட்டை விட்டு வெளியேறுவதாகக் கூறப்படுகிறது. இரண்டாம் திருமணத்தின் பின்னர் நடைபெறக்கூடிய இந் நிகழ்ச்சியை அவளால் ஏன் பொறுக்க முடியவில்லை? இக்காட்சிகள் முரண்பாடாக உள்ளனவே?

நெல்லிகுப்பம்

இரா. சீனுவாசன்

தனது கணவன் இன்னொரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு அவள் மூலம் குழந்தை பெற்றுக் கொள்ளலாம். தன்னை விவாகரத்து செய்துவிடலாம் என்று சொல்வது லாவண்யாவின் பெருந்தன்மை. அவள் அந்தக் காட்சியில் பெண் தெய்வமாகக் காட்சி அளிக்கிறாள். ஆனால் பெண் தெய்வமும் தன் கணவன் கள்ளத்தனமாக இன்னொருத்தியிடம் போவதை விரும்பமாட்டாள். ஆகவே இந்தக் காட்சி பொருத்தமற்ற காட்சி அல்ல. பெரிய ஹைலைட் காட்சி!

—விக

# காட்சி மாறிய காலகட்டங்கள்





1. வேலைக்காரி
2. மனோகரா

அழகிய பெண். நிறந்தான் கருப்பு. பெண் பார்க்க வரும் வாலிபர்கள் ஒருவர் பின் ஒருவராக அவளை நிராகரிக்க அவள் வீட்டிலேயே அவளை எல்லாரும் நிந்திக்கத் தொடங்குகிறனர். எப்படியோ ஒருவனுக்கு மாலையிடும் வாய்ப்புக் கிட்டுகிறது. புகுந்த வீட்டில் ஒன்றன் பின் ஒன்ருகத் தோன்றும் பல பிரச்னைகளைத் தன் புத்திசாதுர்யத்தால் தீர்த்து வைத்து அவரது நன்மதிப்பையும் மெச்சுதலையும் பெறுகிருள். இப்போது அவள் நிறத்தைப் பற்றி யாருமே கவலைப்படவில்லை!

இது ஒரு திரைக் கதை. விஷயமே இவ்வளவுதான். ''நானும் ஒரு பெண்'' என்ற கதை திரைப்படமாகி வெற்றிக் கொடி நாட்டியது. படத்தைப் பார்க்காதவர்கள் மேலே உள்ள ஒரு பாராவைப் படித்தால் இது வெற்றிப் படமாக முடியும் என்று கருதுவார்களா? இதைப் போய் எப்படி சினிமாப்படமாக்க முடியும் என்றுதான் எண்ணுவார்கள். ஆனால் திரை நுணுக்கம் அறிந்தவர்கள் இதிலே பிரச்னை இருக்கிறது. பல்வித உணர்ச்சிகள் உள்ளன. நன்மைக்கும் தீமைக்கும் இடையே போராட்டம் இருக்கிறது. மக்களைக் கவரும்படி காட்சிகளை அமைக்க முடியும் என்றெல்லாம் முடிவு கட்டுவார்கள்.

ஆக, படிக்கும்போது சாமானியமாகத் தோன்றும் விஷயம் படப்பிடிப்பில் பிரமாதமாகிவிடும். இதைத்தான் ''பிரஸண்டேஷன்'' என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள்.

இதற்கு மறுபுறமாகப் படிக்கும்போது பிரமாதமாக இருக்கும் நாவல் படப்பிடிப்பில் ''பிரஸண்டேஷன்'' சரியில்லாததால் பாழாகிவிடுவதும் உண்டு.

ஆக படத்தின் வெற்றிக்கு மூலக் கதை எவ்வளவு முக்கியமோ அந்த அளவுக்குத் திரைக் கதையும் அதாவது ''பிரஸண்டேஷ''னும் முக்கியம்.

• • •

மௌனப் படக் காலத்தில் அதிகமாக எடுக்கப்பட்டவை புராணப் படங்கள்தாம். மக்களுக்கு ஏற்கவே கதை தெரியும் என்பதால் படம் பேசாவிடினும் காட்சிகளைப் புரிந்து கொள்வது எளிதாயிருந்தது. பின்னர் நிசப்தமான சினிமா அலுப்புத் தட்டும் என உணர்ந்து மேடையில் திரைக்குப் பக்கத்தில் இசைக் குழுவை அமரச் செய்து சங்கீதம் ஒலிக்கச் செய்தார்கள். சில காலம் சென்று படம் ஓடும்போதே கதை கூறிவர ஒருவனை அமர்த்தும் பழக்கம் ஏற்பட்டது. இப்போது சமூகக் கதைகளையும் எடுக்க ஆரம்பித்தார்கள்!

• • •

மௌனப் படக் காலம் முடிந்து ஒலி யுகம். பிறந்தது. இந்த முன்னேற்றம் படாதிபதிகளைப் பின்னேக்கிச் செல்ல வைத்தது! அதாவது அவர்கள் மறுபடி புராணப் படத்தில் ஆரம்பித்து ராஜா ராணி கதைப் படங்கள் வழியாகச் சமூகக் கதைகளுக்கு வந்தார்கள்! பாடல்கள்! பாடல்கள்! பாடல்கள்! பாடல்களுக்குத்தான் மவுசு, கதையை யார் கேட்டார்கள்? 40 பாடல்கள் 50 பாடல்கள் கொண்ட படங்கள் என விளம்பரப்படுத்தப்பட்டன. ''சங்கீத லவகுச'' என்றே ஒரு படத்துக்குப் பெயர்!

1931 வரை முழு கதை அம்சம் கொண்ட படங்கள் எடுக்கப்படவில்லை. கதைக்கு முக்கியத்துவம் தராமலேயே வெறுமனே காதல் பாட்டு, பொழுதுபோக்கு என்று படங்கள் உருவாயின.

ஏறக் குறைய 1940ஆம் ஆண்டுவரை சமூகப் பிரச்னைகளைத் தொடாமல் பெரும்பாலும் புராண இதிகாசப் படங்களையே எடுத்துக் கொண்டிருந்தார்கள். சில மாயாஜாலப் படங்களும் வந்தன.

• • •

இந்தக் காலகட்டத்தில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. ''வந்தே மாதரம்'', ''தியாக பூமி'' போன்ற தேசிய உணர்வூட்டும் கதைகள் படமாயின. திரை உலகில் திடுமென்று ஒரு மாறுதல். சமுதாயப் பிரச்னைகளை அலசிச் சீர்திருத்தக் கருத்துக்களை

ப. நீலகண்டன்









3. தியாகபூமி
4. நானும் ஒரு பெண்
5. சந்திரலேகா
6. பராசக்தி

வெளிவிடும் படங்கள் வரலாயின. பிரிட்டிஷ் ஆட்சி பீடத்தின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொண்ட படங்கள் பல. ''நாமிரு''வரில் பாரதியார் பாடல்கள் இடம் பெற்றன.

● ● ●

சந்திரலேகாவின் பெரு வெற்றிக்குப் பிறகு ராஜா ராணி கதைகளுக்கு மவுசு ஏற்பட்டது. இதை யடுத்துப் பகுத்தறிவுப் பாசறை திரை உலகில் புகுந்து வெற்றிக் கொடி நாட்டியது. அதற்கு மக்கள் சற்றும் எதிர்பாராத இடங்களிலிருந்து வரவேற்பு கிடைத்தது. அண்ணாவின் ''ஓர் இரவு'' ''வேலைக்காரி'' போன்ற படங்கள் ''கல்கி'' அவர்களின் பாராட்டைப் பெற்றன. அக்கிரஹாரம் திகைத்தது; பிறகு திரை அரங்குகளை முற்றுகையிட்டது! மறைமுகமான நாத்திக பிரசாரத்தை ''ஆத்திகத்தின் வெற்றி'' என்றே வாதிட்டார் ''கல்கி''. கலைஞரின் ''பராசக்தி''யும் ''மனோகரா''வும் மக்களிடம் அமோக வரவேற்பைப் பெற்றன. திரை உலகில் முன்பு பாடல்கள் எவ்வளவு முக்கியத்துவம் பெற்றனவோ அந்த அளவுக்கு இப்போது வசனங்கள் முக்கியத்துவம் பெற்றன. பாடல்களை முன்பு ரசிகர்கள் அனுபவித்துப் பாடினார்கள்; இப்போது வசனத்தை ரசிகர்கள், நடிகன் காட்டிய அதே உணர்வுடன் ஒப்பித்தார்கள்!

● ● ●

வண்ணப் படம் எடுக்க ஆரம்பித்ததும் ஒரு பெரிய பரபரப்பு ஏற்பட்டது. இந்த முன்னேற்றம் மறுபடியும் படாடோபங்களைப் பின்னேற வைத்தது! அதாவது வண்ணப் படங்களுக்கு ஏற்ற சப்ஜெக்டுகள் புராணக் கதைகளும் ராஜா ராணிக் கதைகளும்தான் என்று தீர்மானித்து மறுபடியும் மாயா ஜாலத்துக்கும் இறைவனின் திருவிளையாடல்களுக்கும் திரும்பினார்கள்.

● ● ●

கார்ட்டூன் படங்களை எடுத்து வந்த வால்ட் டிஸ்னி இயற்கைச் சூழலில் மிருகங்களையும் பறவைகளையும் எடுத்து வருமாறு தமது குழுவினருக்குப் பணித்தார். அவர்கள் எடுத்தது பல்வேறு நிலைக்களன்களில் இயற்கையின் கதை. அதைப் பார்த்த தேவர், இங்கு மிருகங்களை வைத்தே செயற்கையாகக் கதை புனைந்தால் என்னவென்று எண்ணினார்போலும்! அவ்வளவு தான், யாரும் சில காலம் முன்பு நினைத்துக் கூடப் பார்த்திருக்க முடியாத அளவில் இங்கு பல்வேறு பிராணிகளுக்கு நட்சத்திர அந்தஸ்து கிடைத்தது. சினிமா கதாசிரியர்கள் இது வரையில் திரையில் தோன்றாத எந்தப் பிராணியை வைத்து என்ன புதுக் கதை புனையலாம் என்று மண்டையைக் குடைந்து கொண்டார்கள். இதுவும் ஒரு காலகட்டம்!

● ● ●

திடீரென்று செக்ஸும் வன்முறையும் திரை உலகில் தலையெடுத்தன. தமிழகம் நாணித் தலை குனிவதா அல்லது புத்தலையில் மூக்குளிப்பதா என்று புரியாமல் திணறியது. பாடல்களில், வசனங்களில் இரு பொருள் தொனிக்கும் ஆபாசம், நடனங்களில் ஆபாசம்; கதைகளில் ஆபாசம்; நடிகையரின் உடையில், நடையில் ஆபாசம் என்று ஆபாசம் வெள்ளித் திரையை நடு நாயகமாக ஆக்கிரமித்துக் கொள்ள வன்



சாண்டில்யன்
அம்மா



பானுமதி
சண்டிராணி

முறைக் காட்சிகள், பலவந்தமான கற்பழிப்புக் காட்சிகள் ஆகியன பக்கத்திருந்து ஜாலராப் போட்டன.

• • •

இந்த நிலையில் சில புதுயுக இளைஞர்கள் திரையுலகில் அடியெடுத்து வைத்தார்கள். புதுப் பாதை வகுத்தார்கள். இந்த மண்ணுக்கே சொந்தமான கதை; தமிழகத்தின் எழிலைப் பிரதிபலிக்கும் படப்பிடிப்பு; இயல்பான, எளிமையான, அழகான, ஆனால் இலக்கியத்தரமான வசனம் என்று ஆரம்பித்தார்கள். சிலர் ஓரளவு வெற்றியும் வேறு சிலர் அமோக வெற்றியும் பெற்று வருகிறார்கள். இவர்கள் நமது பண்பாட்டினை மதிப்பவர்கள்; ஆனால் போலிப் பண்பாட்டினை வெறுப்பவர்கள். தார்மீக நெறிமுறைகளை வரவேற்பவர்கள்; ஆனால் அதனை வித்தியாசமின்றி அனைவருக்கும் பொது விதியாக்குபவர்கள். குற்றமிழைத்தவர்களைச் சாடுபவர்கள், ஆனால் குற்றமிழைக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டவர்களிடம் பரிவு காட்டுபவர்கள். வசனத்தைக் குறைப்பவர்கள்; நடிப்பிலேயே ரசிகர்களுடன் பாத்திரங்களைப் பேச வைப்பவர்கள். இந்தப் புதிய இளைஞர்களின் நன் முயற்சியால் திரை உலகின் அனைத்துத் துறையிலும் பல புது முகங்கள் தோன்றியுள்ளன.

• • •

இந்த மாற்றங்கள் இத்துடன் நில்லாது. மறுபடி திசை மாறும். புதிய பாதை வகுக்கப்படும். அது மர்மக் கதைப் படங்களுக்கு மகத்துவமாக இருக்கலாம். அல்லது விஞ்ஞானக் கதைப் படங்களுக்கு வரவேற்பாக இருக்கலாம்; அல்லது வேறு ஏதோ ஒன்றாகவும் இருக்கலாம்.

காலம் மாற, கருத்து மாற, அந்தந்தக் காலகட்டத்தில் அன்றைய புத்தலையாக ஒரு பாணி தோன்றுகிறது. உயர்ந்து, உச்சத்தை அடைந்து, அடங்கிவிடுகிறது.

எந்தக் காலகட்டத்தை எடுத்துக் கொண்டாலும் அதில் உன்னதமான படங்களும் இருந்ததுண்டு. உதவாக்கரைப் படங்களும் எடுக்கப்பட்டதுண்டு. சர்வ சாதாரணப் படம் வெற்றி அடைந்ததுமுண்டு; இலக்கியத்தரமான திரைக் காவியம் படு தோல்வி கண்டதுமுண்டு. படமும் நன்றாக இருந்து அது பெரு வெற்றியும் பெறுவதையும் பல சந்தர்ப்பங்களில் காண்கிறோம். அனைத்துக்கும் அடிப்படை ரசிகப் பெரு மக்களின் தீர்ப்பே.

ஆட்சியின் ஆயுளை நீடிக்கும் அவர்கள் தான் படத்தின் ஆயுளையும் நிர்ணயிக்கிறார்கள். எத்தனையோ ஆண்டு காலமாகத் தங்களை மகிழ்வித்து வரும் பட உலகுக்கு அவர்கள் அளித்துள்ள தனிக் கௌரவம் ஒரு நல்லவரை, நேர்மையாளரை, நடிகரை, தகுதி உணர்ந்து ஆட்சிப் பொறுப்பில் வைத்திருப்பது!

[கண் ஆபரேஷன் செய்து கொண்டிருக்கும் திரு ப. நீலகண்டன் அவர்களுடன் உரையாடிய பின்னர் அவர் சார்பில் கல்கி ஆசிரியர் குழாம் எழுதிய கட்டுரை.]

---

''பொருத்தமற்ற காட்சி''

## ரிஷி மூலம்

கிளைமாக்ஸ் காட்சியில் அவ்வளவு தூரம் கார் ரேஸ் வைத்து விறுகப் படத்தின் மதிப்பைக் குறைத்துள்ளீர்களே! காரணம் என்னவோ? அதைத் தவிர்த்து நாடகத்தின் முடிவைப் போல அமைத்திருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்குமே!

தஞ்சாவூர் — சரஸ்வதி பிரியன்



ரிஷி மூலம் படத்தின் கிளைமாக்ஸ் காட்சிகள் நம் மக்கள் விரும்பும் அளவுக்குப் பரபரப்பாக இருக்க வேண்டும் என்பதற்காகவே சேர்க்கப்பட்டவை என்பதை ஒப்புக் கொள்கிறேன். நாடகத்தைப் போலவே முடிவு சொல்லா விட்டால் படத்தில் திருப்தி இருக்காது என்பதால் இப்படிச் செய்தோம்.

—எஸ். பி. முத்துராமன்

## பில்லா

நொண்டி தேங்காய் சீனிவாசன் கடைசிக் காட்சியில் கயிற்றின் மேல் நடப்பது எப்படி?

காரமடை — ஆர். பார்த்திபன்



நான்கு அடி உயரமுள்ள ஒரு ஸ்டூலின் மேல் நின்று கொண்டுதான் தேங்காய் சீனிவாசன் கயிற்றின் மேல் நடப்பது போல் உள்ள காட்சியை எடுத்தேன். ஒரு இடத்தில் கால் தவறுவது போலவும் காண்பித்தேன். படம் பார்த்துக் கொண்டிருக்கும் மக்கள் இந்த இடத்தில் 'ஐயோ' என்றனர். உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டும் இருந்தனர். இப்படி ரசிக்கும் மக்களுக்கு ஏமாற்றம் அளிக்காதிருப்பதற்காகத்தான் இம்மாதிரியான காட்சிகள்.

—ஆர். கிருஷ்ணமூர்த்தி

# "எனக்கிருந்த கவலைகளெல்லாம் தீர்ந்துபோய்விட்டன— எங்கள் சாந்தாவின் கல்யாணத்திற்கு ஒரு மாதம் முன்பே."

—என்கிறார் திரு. குப்தா,*பள்ளி ஆசிரியர், கான்பூர் கிளையின் வாடிக்கையாளர்.

## இந்தியன் பாங்கின் ரொக்க சர்டிபிகேட்கள் திட்டத்தின் மூலம், நீங்களும் எப்படி திரு. குப்தாவைப் போல் செல்வச் செழுமை அடையலாம் என்பதை விளக்கும் ஓர் உண்மை நிகழ்ச்சி.

"ஒரு கல்யாணத்தை நிச்சயம் செய்ய பல்லாயிரம் வார்த்தைகள் வேண்டும் என்பது பழமொழி. அது, பல்லாயிரம் ரூபாய்களாக இருக்க வேண்டும் என்பேன் நான். எங்கள் ஒரே மகள் சாந்தாவின் கல்யாணத்திற்கு முன், போதுமான பண ஒதுக்கீடு செய்திருந்தபோதும், என்னமோ நானும் அப்படித்தான் நினைத்தேன். நான் செய்திருந்ததெல்லாம் பத்து வருடங்களுக்கு முன் சுமார் 4000 ரூபாய்களுக்கு ஒரு ரொக்கப் பத்திரம் வாங்கி வைத்திருந்தது தான். அப்போது, அது ஒரு நாளைக்கு உபயோகமாகும் என்று நினைத்தேன். சாந்தாவின் கல்யாணம் திடீரென்று நிச்சயமானபோது அந்த ரொக்கப் பத்திரம் நிஜமாகவே உபயோகப்பட்டது. எனக்கிருந்த கவலைகளெல்லாம் எங்கள் சாந்தா கல்யாணத்திற்கு ஒரு மாதம் முன்பே தீர்ந்துபோய் விட்டன."

**திரு. குப்தாவின் அனுபவத்தினால் பயனடையுங்கள்.**

திரு. குப்தாவைப்போல் முனைந்து முயற்சி எடுங்கள்.

உங்கள் அருகாமையில் இருக்கும் இந்தியன் பாங்க் கிளை அலுவலகத்தின் மானேஜரை சந்தியுங்கள். அவர் உங்களுக்கு ஆலோசனை சொல்ல மிகவும் தகுதி உள்ளவர்.

*அந்தரங்கத்தை உத்தேசித்து, சம்பந்தப்பட்டவர்களின் உண்மைப் பெயர்கள், மற்ற குறிப்புகள் மாற்றப் பட்டுள்ளன.



**இந்தியன் பாங்க்**

(இந்திய அரசு நிறுவனம்.)

உங்கள் செல்வச் செழுமைக்கு உதவும் வங்கி

SAA/IB/774

# காப்பி அடிப்பது ஏன்?

தமிழிலும் சரி பிற இந்திய மொழிகளிலும் சரி அயல் நாட்டுப் படங்களை அப்படியே காட்சிக்குக் காட்சி முன் அனுமதி பெறாமலே காப்பி அடிக்கிறார்கள். உள் நாட்டிலும் ஒரு மொழிப் படத்தை இன்னொரு மொழியில் அனுமதி பெறாமலே காப்பி அடிக்கிறார்கள்.

வேற்று நாட்டு, வேற்று மொழிக் கதைகளிலும் படங்களிலும் மோகம் ஏன்? காப்பி அடிப்பவர்கள் மீது சட்டபூர்வமாக நடவடிக்கை எடுக்க முடியாதா?

இந்தியத் திரைப்பட சங்கங்களின் கூட்டமைப்பின் தென் மாநிலச் செயலாளர் திரு வி. சுப்பிரமணியன் பதில் கூறுகிறார்:



வி. சுப்பிரமணியம்

காப்பி அடிப்பவரின் மீது வழக்குப் போடும் உரிமை ஒரிஜினல் படத் தயாரிப்பாளருக்கோ அல்லது அவரது அதிகாரம் பெற்ற பிரதிநிதிகளுக்கோ மட்டுமே உண்டு. அரசோ தாதரகங்களோ வழக்குப் போட முடியாது. Dirty Harry என்ற ஆங்கிலப் படம் Khoon Khoon என்ற ஹிந்திப் படமானது, World of children என்ற துருக்கியப் படம் Khatta Metta என்ற ஹிந்திப் படமாகித் தற்போது தமிழில் 'மழலைப் பட்டாளம்' ஆகியுள்ளது. Conquerors of t he golden city -பட்டிணப் பிரவேசமாக மாறியது. Sound of Music சாந்தி நிலையம் ஆனது. Frenzy, Boston strang-ler ஆகிய படங்கள் இணைந்து சிவப்பு ரோஜாக்கள் படத்துக்கு வழி வகுத்தது. 'ஜாங்கோ' படத்தின் திரிபுகளையும் சேர்த்தால் பட்டியல் மிக மிக நீண்டுவிடும்.

தொழில் ரீதியாகத் திரையரங்கங்களில் வெளியாகும் வெளி நாட்டுப் படங்களைத் தவிர, எங்கள் கூட்டமைப்பில் இயங்கும் பல திரைப்படச் சங்கங்கள் நம் நாட்டில் 'ரிலீஸ்' ஆகாத எத்தனையோ மேல் நாட்டுப் படங்களை அங்கத்தினர்களுக்குத் திரையிட்டுக் காட்டுகின்றன. 'இவற்றில் காப்பி அடிக்க நல்ல கதை கிடைக்காதா, நமது மொழியில் படம் எடுத்துக் கொள்ளலாமே' என்ற நோக்கத்துடனேயே எத்தனையோ தயாரிப்பாளர்களும், இயக்குனர்களும் அங்கத்தினராக இருப்பதை நான் அறிவேன். சர்வ தேசத் திரைப்பட விழாக்கள் நம் நாட்டில் நடக்கும்போது தயாரிப்பாளர்களும் இயக்குனர்களும், திரைக் கதை ஆசிரியர்களும் முண்டியடித்து ஓடுவதும் இதற்காகவே.

காப்பி அடிக்கும் எண்ணம் நம் தயாரிப்பாளர்களுக்குத் தோன்றச் சில அடிப்படைக் காரணங்கள்:

(1) காப்பி அடித்து நாம் எடுத்தோம் என்கிற உண்மை, எத்தனை ரசிகர்களுக்குத் தெரியப் போகிறது என்கிற எண்ணம்.

(2) நமது மொழிக் கதைகளை விட மேல் நாட்டுக் கதைகள் உயர்ந்தவை, அவற்றை ரசிகர்கள் அமோகமாக வரவேற்பார்கள் என்கிற தாழ்வு மனப்பான்மை.

(3) ஏற்கனவே படமாக்கப்பட்ட கதையைப் படமாக்குவது சுலபமானது.

(4) ஏற்கனவே வெற்றி பெற்ற படமாதலால் இம்மொழியிலும் வெற்றி அடையும் என்கிற குருட்டு நம்பிக்கை.

(5) மேல் நாட்டுத் தயாரிப்பாளருக்கு நாம் காப்பி அடிப்பது எப்படித் தெரியப் போகிறது என்கிற எண்ணம்.

ஆனால் மேல் நாட்டுத் தயாரிப்பாளருக்கு விஷயம் தெரிய வந்து வழக்கு என்று போட்டு விட்டால் ஆபத்துத்தான். நஷ்ட ஈடு கொடுக்க நேர்ந்த ஓரிரு சம்பவங்களை நான் அறிவேன். தமிழ்ப் படத் தயாரிப்பாளர் ஒருவரும் இம்மாதிரி நஷ்ட ஈடு கொடுத்துள்ளார்.

ஆனால் பல மேனாட்டுத் தயாரிப்பாளர்களுக்கு விஷயம் தெரிய வந்தாலும் அவர்களுக்கு உலக மார்க்கெட்டு இருப்பதால் அலட்சியமாக இருந்து விடுகிறார்கள். தங்கள் படத்தைப் பார்த்துக் காப்பி அடிக்கப்படுவதைத் தங்கள் திறமைக்குக் கிடைத்த சான்றிதழாக நினைப்பவர்கள் கூட உண்டு.

வழக்கு என்று வந்த பிறகு சமரசமாகப் போய்விடலாம் என்று ஒரு தொகையைக் கொடுத்து Out of court settlement செய்து கொள்வதும் உண்டு.

இந்த இழிநிலையை மாற்ற சட்டமும், கோர்ட்டும் போதாது. நமது தயாரிப்பாளர்களின் மன நிலையில் ஆரோக்கியமான மாற்றம் தேவை. 'பசி', 'உதிரிப் பூக்கள்' போன்ற சமீபத்திய படங்களின் வெற்றி இந்த நல்ல திருப்பத்தை ஏற்படுத்தி வருகின்றது.

பேட்டி: **நாயகன்**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

